பற்களின் மீதான
தம்முடைய பிடிமானம்
தளர்ச்சி அடைய
உங்கள் ஈறுகளுக்கு
இடமளிக்காதீர்!

ஈறுகளை பலப்படுத்துவதற்கான விசேட
அஸ்ட்ரிஞ்ஜெண்ட் அடங்கியிருப்பது ஃபோர்ஹென்ஸ் ஒன்றில்தான்.
உங்கள் ஈறுகள் உறுதியோடிருக்கும் போது உங்கள்
பற்கள் நீடித்த ஆயுளைப் பெறுகின்றன.

சிறந்த அமெரிக்கப் பல் டாக்டர் ஆர். ஜே.
ஃபோர்ஹென், தன்னுடைய டூத் பேஸ்ட்டில் விசேட
அஸ்ட்ரிஞ்ஜெண்ட் ஒன்றைச் சேர்த்தார்! அது.
ஈறுகளில் நேரடியாக செயல்பட்டு உண்மையிலேயே
அவற்றை பலப்படுத்துகிறது. அது, ஈறுகளைப்
உறுதிப்படுத்துவதால் பற்கள் சிறந்த
பிடிமானத்தைப் பெறுகின்றன. ஆகவே பற்களுக்கு
உறுதியான அடித்தளமும் நீடித்த ஆயுளும்
கிடைக்கின்றன.




**போர்ஹென்ஸ்** – பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்

339F 203 TAM

# அமைச்சர்களே... புது அமைச்சர்களே!

**புதிதாய்ப் பதவி ஏற்றுள்ள ஏழு அமைச்சர்களிடம் அந்தந்தத் துறையில் சம்பந்தப்பட்டவர்கள் என்ன எதிர்பார்க்கிறார்கள்?**

## கிராமப்புறத் தொழில்கள்





**டாக்டர் வெங்கட சுப்பிரமணியம் (திட்டக் கமிஷன்) உறுப்பினர் சொல்கிறார்.**

நமது நாட்டில் ஒரு எண்ணம் இருக்கிறது. அதாவது கிராமத் தொழில்கள் என்றால், நெசவு வேலை, பாய்கள் முடைதல், தீப்பெட்டிச் செய்தல் போன்றவைகள்தான் என்பது. இது மாற்றப்பட வேண்டிய கருத்து. கிராமங்களிலிருந்து மக்கள் வேலை வாய்ப்புக்கு வழியின்றி நகர்ப்புறங்களுக்கு வருவதினால் தான் சேரிகள் தோன்றுகின்றன. நகரங்களில் ஜன நெரிசல் அதிகரிக்கிறது. அவர்களுக்குக் கிராமங்களிலேயே வேலை வாய்ப்புக் கொடுக்க வழி செய்ய வேண்டும். இதற்கு முதற் கட்டமாக எலெக்ட்ரானிக் சாதனங்களை — உதாரணமாக டி.வி. ரேடியோவுக்கு வேண்டிய பாகங்கள் — உற்பத்திச் செய்ய எலெக்ட்ரானிக் எஸ்டேட்கள் அமைக்கலாம். கிராமங்களில் படித்தவர்கள் இல்லையே என்று சொல்லலாம். இது தவறானது. தற்போது கிராமங்களில் கூட பாலிடெக்னிக் பள்ளிகள் வந்துவிட்டன. அங்கு எம்.ஏ., எம்.எஸ்ஸி படித்த ஆசிரியர்கள் இருக்கிறார்கள். அவர்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம். பஞ்சாப் மாநிலத்தில் கிராமங்களில் மோட்டார் பாகங்கள், ஸ்பிரிங் பாகங்கள் போன்றவற்றைத் தயாரிக்கிறார்கள். பஞ்சாபில் நடக்கக் கூடியது இங்கு நடக்காதா என்ன? புதிதாக வந்திருக்கும் அமைச்சர் **ஆனூர் ஜெகதீசன்** அவர்கள் இதுபோல் பல திட்டங்களைச் செயல்படுத்த முன்வர வேண்டும். அப்போதுதான் நமது கிராமங்களுக்குப் பொருளாதாரத் தன்னிறைவு வரும்.

## அகதிகள் புனர் வாழ்வு





**பாண்டியன் (இலங்கை அகதி) கூறுகிறார்:**

இலங்கையிலிருந்து ஓடி வரும் தமிழர்களுக்குத் தமிழக அரசு தன்னால் இயன்ற வரை உதவி வருகிறது. ஆனாலும் இன்னும் சில காரியங்கள் செய்தால் மிக்க நன்றியுடையவர்களாக இருப்போம்.

—அகதிகளுக்குக் கூடியவரை தமிழகத்திலேயே வேலை வாய்ப்பு ஏற்படுத்தித் தர வேண்டும்.

—மண்டபம் முகாமில், அகதிகள் கொண்டு வரும் பொருட்களைக் களவாடும் ரெளடிகளை ஒழிக்க வேண்டும்.

—அகதிகளுக்குக் கொடுக்கும் உதவிப் பணத்தில் கமிஷன் அடிக்கும் அதிகாரிகளைக் கண்டுபிடித்துத் தண்டனை தர வேண்டும்.

—ராமேஸ்வரத்தில் நவீன வசதிகளுடன் கூடிய ஆஸ்பத்திரி ஒன்று கட்டினால், தோணியில் பயணம் செய்து தமிழகம் திரும்புவோர் மீது இலங்கை ராணுவம் தாக்கினாலும், மற்றும் நமது மீனவர்களை இலங்கை ராணுவம் தாக்கினாலும் உடனடியாக நல்ல சிகிச்சைப் பெறலாம். புதிதாக நியமிக்கப்பட்டுள்ள புனர் வாழ்வு மந்திரி டி.ராமசுவாமி நான் குறிப்பிட்ட தற்கும் மேலாக உதவிகள் செய்ய முன்வருவார் என்று நம்புகிறேன்.

## வீட்டு வசதி





**வீட்டுவசதி காண்டிராக்டர் ஒருவர்:**

(பெயர் குறிப்பிட விரும்பவில்லை)

வீட்டு வசதி வாரியத்துக்காக வீடுகள் கட்டித் தரும் பொறுப்பை ஏன்தான் ஏற்றுக் கொண்டோம் என்ற சலிப்பினைத் தரும் வகையில், அதிகாரிகள் எங்களை வாட்டுகிறார்கள். டெண்டர் போடும் போதே இத்தனைச் சதவீதம் அதிகமாகப் போடுங்கள் என்று சொல்கின்றனர். கண்ட்ரோல் விலையில் தரப்படும் சிமெண்ட், ஸ்டீல் போன்றவற்றில் கமிஷன் அடிக்கின்றனர். அதுமட்டுமல்ல. கொடுப்பதை மிகவும் தாமதமாகவும் கொடுக்கின்றனர். வீடுகள் கட்டும் போது ஒவ்வொரு கட்டத்திலும் கண்காணித்துப் பணத்தைத் தர வேண்டியவர்கள் மிகத் தாமதமாகப் பணத்தைத் தருகிறார்கள். மேற்சொன்னவைகளால் எங்களைவிட அதிகமாகப் பாதிக்கப்படுபவன் வீட்டு வசதி வாரிய வீடு வாங்கியவன்தான்.

வீடுகள் ஒதுக்குவதில் பல முறைகேடுகள் இருக்கின்றன. ஜெனரல் பூல் என்று சொல்லப்படும் கோட்டாவின் சதவீதம் குறைந்து கொண்டே போகிறது. மந்திரி கோட்டா என்று கொள்ளையடிப்பதற்காகவே ஒன்று வைத்து உள்ளனர். முக்கியமாக வீட்டு வசதி வாரியத்தில் லஞ்சத்தையும் ஊழலையும் ஒழிக்கப் புது அமைச்சர் நல்லுசாமி நடவடிக்கை எடுக்க வேண்டும்.

**நில்லப்பா**

## வணிகவரித் துறையில்





சைதை வர்த்தகச் செயலாளர்

**திரு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி கூறுகிறார்:**

புதிய அமைச்சர் மாண்புமிகு வீராசாமி பதவியேற்ற உடனேயே சொன்னார்: "வரி ஏய்ப்புக் கூடாது. வரி பாக்கிகளை வைக்கக் கூடாது..." என்று.

எல்லாப் பொருள்களுக்குமே ஒருமுனை விற்பனை வரிதான் என்று ஆகிவிட்டால் எந்தப் பிரச்னையும் வராது. வரி ஏய்ப்பு கூடாது என்பதில் வியாபாரிகளுக்கும் சரி; அதிகாரிகளுக்கும் சரி, பொது மக்களுக்கும் சரி, கருத்து வேறுபாடே கிடையாது. அரிசிக்கும் கோதுமைக்கும், அவை அத்தியாவசியப் பொருள்கள் என்பதால் விற்பனை வரி கிடையாது. ஆனால் மிளகாய், புளி, தனியா, மஞ்சள் என்று எடுத்துக் கொண்டால் பல முனை வரி பிடித்து அழுத்துகிறது: இவைகளும் அத்தியாவசியமான பொருள்கள் என்று ஏன் சேர்க்கவில்லை?

பல முனை விற்பனை வரியால் எல்லோருக்கும் தொல்லை. அதிகமாகத் தொல்லைப் படுகிறவர்கள் கன்ஸ்யூமர் — நுகர்வோர் தான். ஒரு பெரிய வியாபாரி கொள்முதல் செய்து விற்க, அவரிடம் ஒரு நடுத்தர வியாபாரி வாங்கி விற்க — அவரிடம் ஒரு சிறிய வியாபாரி வாங்கி விற்க என்று ஒவ்வொரு கட்டத்திலும் வரி செலுத்த வேண்டி வருகிறது! எல்லாம் கடைசியில் யார் தலையில் போய் விழுகிறது? பொது மக்களிடம்தானே?

**வேல்பாச்**

## கைத்தறி

**திரு செல்வராஜ்**

கைத்தறி அமைச்சர் வி.வி. சுவாமிநாதன் அவர்களிடம் கடந்த 15 வருடங்களாக நெசவுத் தொழிலில் ஈடுபட்டுள்ள திரு. செல்வராஜ் எதிர் பார்ப்பது என்ன?





சொல்கிறார்: "கைத்தறி வெச்சிருக்கறவங்க, விசைத் தறியோடப் போட்டிப்போட முடியலே. கைத்தறிக்குன்னே சில வகைகளை அரசாங்கம் ஒதுக்க ஏற்பாடு செய்யணும். உற்பத்தி செய்த துணிகளை, கோ–ஆப்டெக்ஸ் மூலமா உடனடியா எடுத்துக்க வழி செய்யணும். அதோட இல்லாம, எடுத்துக்கிட்ட துணிக்கு, இழுத்தடிக்காம, உடனடியாப் பணம் கிடைக்க வழி செய்யணும். அதில ஒரு பகுதிக்கு, நூலாக் கொடுத்தாக்கூட வசதிதான். நூல் விலை மாறுவாரியா ஏறிக்கிட்டிருக்கு. சமயங்களில் கிடைப்பதே இல்லே. நெசவாளர்களுக்கு நியாயமான விலையில் எப்பவும் நூல் கிடைக்கறதுக்குப் புது மந்திரி வழி பண்ணணும்."

## ஆதி திராவிடர் நலன்





**முருகன்**

ஆதி திராவிடர் நல அமைச்சர் ஏ. அருணாசலம் அவர்களிடம், ஆதி திராவிட இனம் என்ன எதிர்பார்க்கிறது? "எங்களுக்குன்னு, ரிசர்வேசன் கோட்டா இருந்தாலும், அரசாங்க உத்தியோகமெல்லாம் கிடைக்கிறது கஷ்டமாத்தான் இருக்கு. காரணம் எங்களவங்களுக்கு நெறைய படிப்பும் வசதியும் கிடையாது. அதனால எங்க இனத்துல, வேலை இல்லாதவங்க ஜாஸ்தி. இதுக்கு ஒரு வழி பண்ணலாம். எங்களுக்குன்னு, சில ஸ்பெஷல் சுயவேலை வாய்ப்புத் திட்டங்கள் உருவாக்கிக் கொடுக்கலாம். நிறைய மாணவ ஆஸ்டலகள் கட்டி, ஆதி திராவிட மாணவர்கள் படிப்பறிவு பெறவும் தொழிற் கல்வி அடையவும் வழி பண்ணலாம்" என்கிறார் செருப்புத் தைக்கிற 30 வயது முருகன்.

## தொழில் துறை

**திரு சம்பந்தம்**

தொழில் அமைச்சர் கே. ராஜாராம் அவர்களிடம் தொழில் துறையினர் சார்பில் கிண்டி தொழிற்பேட்டை, உற்பத்தியாளர் சங்கத் தலைவர் திரு. சம்பந்தம் கோரிக்கை விடுக்கிறார்:

"மூலப் பொருட்களுக்கே தட்டுப்பாடு. டெல்லியில் போய்ச் சண்டை போட்டு வாங்கி வர வேண்டிய நிலை. இது சம்பந்தமான மாதாந்திர மீட்டிங்குக்கு, மற்ற மாநிலங்களிலிருந்து முதலமைச்சரோ, தொழிலமைச்சரோ போகிறார்கள்; தத்தம் மாநிலத்துத் தேவைகளை வாங்கிக்கொண்டு திரும்புகிறார்கள்; தமிழகத்திலிருந்து மட்டும், ஒரு டெபுடி டைரக்டர் போகிறார்; அவருக்குப் பேசவே சான்ஸ் தரப்படுவதில்லை. கொடுத்ததை வாங்கிக் கொண்டு வரவேண்டியுள்ளது. புதுத் தொழில் மந்திரியாவது இனி தாமே இந்தக் கூட்டங்களுக்குப் போய் வாதாடிப் பிரச்னைகளைத் தீர்க்க முயல வேண்டும். மூலப் பொருட்கள் தவிர, தண்ணீர், மின்சாரம் இவை தட்டுப்பாடு இன்றி கிடைக்க ஆவன செய்ய வேண்டும். கடந்த 18 வருடங்களில் புதிதாய் வந்துள்ள பெரிய தொழிற்சாலைகள் . ராணிப்பேட்டை, பி.ஹெச்.ஈ.எல்., புகளூர் காகித ஆலை தவிர வேறு என்ன? வெளி மாநிலத்தவர், இங்கே தொழில் தொடங்க முன் வராததற்கும், நம் மாநிலத்தவர் இங்கே தொடங்காமல், வெளி மாநிலங்களில் போய்த் தொடங்குவதற்கும் காரணம் இங்குள்ள பிரச்னைகள் மிகுந்த, சகிக்கும் தரப்படாத சூழ்நிலைதான். பகிரங்கமாகச் சொல்லமுடியாத பிரச்னைகளும் உண்டு. புது மந்திரியைத் தொழில் துறை சம்பந்தப்பட்ட எவரும் எளிதில் சந்தித்துப் பிரச்னைகளைத் தைரியமாகச் சொல்கிற நிலை வர வேண்டும். இதற்கு வகை செய்வாரா பார்க்கலாம்.

தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**





# சட்டம் என்ன சொல்லுகிறது?

**வாசகர்களின் கேள்விகளுக்குப் பதில்கள் அளிப்பவர் சென்னை சட்டக்கல்லூரிப் பேராசிரியரும், வழக்கறிஞருமான திரு. ஆர். எம். கிருஷ்ணராஜு:**

டி. சோமசுந்தரம், வேலூர் (சேலம்)

**நான் பெற்று, வளர்த்து, படிக்க வைத்து ஆளாக்கிய மகன்கள் சென்ட்ரல் கவர்ன்மெண்ட் வேலையில் நல்ல சம்பளம் வாங்கிக் கொண்டு இருக்கிறார்கள். வேலை கிடைத்த உடன், பெற்றோரை (என்னையும், மனைவியையும்) விட்டு விலகிச் சென்றுவிட்டார்கள். வயதான காலத்தில் யார் துணையும், ஆதரவும் இல்லாமல் இருக்கும் எங்களுக்கு என் மகன்களிடமிருந்து பண உதவி பெறச் சட்டத்தில் வழி இருக்கிறதா? நாங்கள் இந்துக்கள்.**

இந்துக்களின் பழைமையான, பயனுள்ள, பாதுகாப்பான 'ஏக இந்துக் குடும்ப முறைகளை' மறந்து வரும் இன்றையச் சமுதாயத்தில் இத்தகைய பரிதாபங்களும், அவலங்களும், ஆபத்துக்களும் அதிகரிக்கின்றன.

''வயதான பெற்றோரையும், கற்புள்ள மனைவியையும், சின்னஞ்சிறு குழந்தைகளையும், நூறு தவறுகள் இழைத்தேனும் காப்பாற்ற வேண்டும்'' என்பது நம்முடைய அன்றைய மனுதர்மக் கோட்பாடு.

இன்றைய, ''இந்து தத்து மற்றும் பேணுகை''ச் சட்டத்தின் 20-வது விதிப்படி, ''ஒரு இந்து தன் வாழ்நாளில், முறையான அல்லது முறைகேடான தன்னுடைய குழந்தைகளையும், வயதான அல்லது நலிந்த தன்னுடைய பெற்றோரையும் காப்பாற்றி ஆக வேண்டும்.''

ஆகையால், நீங்கள் உங்கள் மகன்கள் பேரில் சிவில் கோர்ட்டில் வழக்குத் தொடுத்து, கோர்ட்டாரால் நிர்ணயிக்கப்படும் தொகையை ஜீவனாம்சமாகப் பெறச் சட்டத்தில் இடம் இருக்கிறது.

சட்ட பூர்வமான இந்த யோசனையோடு, சமுதாய ரீதியான ஒரு கருத்தையும் சொல்லலாமா?...

உங்கள் பிள்ளைகள் உங்களைப் புறக்கணித்ததற்கு அடிப்படையான காரணங்களை ஆராய்ந்து பாருங்கள். ஒருவேளை, எந்த விதத்திலாவது நீங்களே அதற்குக் காரணமாக இருந்தால், அவற்றை நிவர்த்திக்க அல்லது நீக்கத் தேவையான எல்லா முயற்சிகளிலும் ஈடுபடுங்கள்.

வெறுப்புக்கள், கோபங்கள், ஆத்திரங்கள், ஆசைகள், அசூயைகள், அதிகப்படியான அதிகாரங்கள் போன்ற மனோ வியாதிகளுக்கு ஆட்பட்டிருக்கும் வரை பிறருடைய அன்பைக் காண முடியாது.

சட்டத்தாலும், வழக்காலும், மகன்களிடமிருந்து பணத்தைப் பெறுவதைவிட,

மனத்தாலும், அன்பினாலும் உங்கள் மகன்களிடமிருந்து பாசத்தைப் பெறுவது மேலானது அல்லவா?...

இரா. துளசிராமன், சென்னை—15.

**எங்களுடைய வீட்டுக்காரர் வருடா வருடம் வாடகையை அதிகரித்துக் கொண்டே போகிறார். மேலும், வீட்டில் ரிப்பேர்கள் எதுவும் செய்ய மறுக்கிறார். கேட்டால், வீட்டைக் காலி பண்ணச் சொல்லுகிறார். என்ன வழி?**

வீட்டுக்காரர் வாடகையை அகாரணமாக அதிகரித்து விட்டாரென்று கருதினால், 'தமிழ்நாடு கட்டிடங்கள் (வாடகை மற்றும் கட்டுப்பாடு) சட்டம்' 4-வது பிரிவின் படி மனுச் செய்து, நியாயமான வாடகையை நிர்ணயிக்கும்படி கோர்ட்டாரைக் கோரலாம்.

அதே சட்டத்தின் 22-வது பிரிவின்படி, கட்டிடத்தில் ஏற்பட்டுள்ள பழுதுகளைச் சுட்டிக்காட்டி, சரிபார்க்கும்படி வீட்டுக்காரருக்கு நீங்கள் ஓர் அறிவிப்பை அனுப்பி, போதுமான சிலகால அவகாசத்திற்குப் பிறகும், வீட்டுக்காரர் பழுது பார்க்க முன்வர

வில்லை என்றால், பின்னர் உங்கள் செலவில் அந்தப் பழுதுகளைப் பார்க்கவும், அதற்கான செலவினங்களை வாடகைத் தொகையிலிருந்து கழித்துக் கொள்ளவும் அனுமதி வேண்டிக் கோர்ட்டில் மனுச் செய்து, தக்க உத்திரவு பெற்றுக் கட்டிடத்தின் பழுதுகளைச் சீர்செய்யவும். கோர்ட்டாரின் முன் அனுமதியின்றி, உங்களால் மேற்கொள்ளப்படும் செலவினங்களுக்கு வீட்டுக்காரர் பொறுப்பாக மாட்டார்.

வீட்டுக்காரர், சட்டப்படி தக்க காரணமின்றி உங்களைக் காலி செய்யச் சொல்ல முடியாது. சட்டம் குடியிருப்பவருக்குப் பலத்த பாதுகாப்புத் தருகிறது.

வீட்டுக்காரரின் கட்டிட உரிமையை மறுத்தல்; வாடகையைச் சரிவரச் செலுத்தாமலிருத்தல்; கீழ் வாடகைக்கு விடுதல்; வாடகைக்கு விடப்பட்ட நோக்கங்களுக்காக அன்றி, கட்டிடத்தை வேறு வகையில் பயன்படுத்துதல் போன்ற சில பல அசாதாரண சந்தர்ப்பங்களில்தான் வீட்டைக் காலி பண்ணச் சொல்ல முடியும்.

எனவே நீங்கள் அஞ்சற்க!...

**எஸ். கணேசன், திருநெல்வேலி.**

**உயிலை வெற்றுக் காகிதத்தில் எழுதினால் போதுமா? அல்லது ஸ்டாம்ப் பேப்பரில் எழுத வேண்டுமா? உயிலில் அசையும் சொத்துக்கள் (ஆடு, மாடு) பற்றிக் குறிப்பிடலாமா?**

ஸ்டாம்ப் பேப்பர் தேவை இல்லை. வெற்றுக் காகிதம் போதும். ஆடு, மாடு, யானை, பூனை, எருது, கோழி என்று எதைப் பற்றி வேண்டுமானாலும் பேஷாகக் குறிப்பிடலாம்.

பாரதப் பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் விட்டுச் சென்ற உயிலில், தம் உடலை சாம்பலை இந்தியாவின் வயல் வெளிகளில் தெளிக்கச் சொன்னதையும், கடல்களில் கரைக்கச் சொன்னதையும், அந்தக் கடைசி உயிலின் காவிய வரிகளையும் மறந்து விட்டீர்களா...?

**மு. முருகேசன், மதுரமங்கலம்.**

**தந்தை தன் மைனர் மகனுக்காக எழுதி வைத்த சொத்தை மைனருக்குக் கார்டியனாக உள்ளவர் (தாயோ, தந்தையோ) விற்க உரிமை உண்டா? உரிமை இல்லை எனில், அவ்வாறு விற்கப்பட்ட சொத்தை மைனர் திரும்பப் பெற முடியுமா? காலம், வயது வரம்பு உண்டா?**

பதினெட்டு வயது பூர்த்தி அடையாத "மைனரின்" சொத்துக்களைக் கோர்ட்டாரின் முன் அனுமதியின்றி, கார்டியன் விற்பதென்பது, மைனராலும், அவர்கீழ் உரிமை கொண்டாடுபவராலும் விலக்கத்தக்கதாகும். **(voidable).** அவ்வாறு, கோர்ட்டின் முன் அனுமதி இன்றி, கார்டியனால் மேற்கொள்ளப்பட்ட விற்பனைக்கு எதிராக, மைனர் தன்னுடைய 'இயலாமைப் பருவம்' முடிந்த மூன்று ஆண்டுக் காலத்திற்குள், அதாவது 21 வயதிற்குள், தாவா செய்ய வேண்டும்.

**க.ர. ராமசாமி, மேட்டூர் டேம்.**

**எனது தாத்தா தனது காலத்திற்குப் பிறகு, தனது வீட்டைத் தனது 3 மகன் வயிற்றுப் பேரப் பிள்ளைகளுக்கு, 1947—ல் உயில் எழுதிவைத்துவிட்டு, 15 ஆண்டுகளுக்கு முன்பு காலமாகிவிட்டார். அந்த வீட்டை 3 பேரன்களும் பிரித்துக் கொள்ளுவதற்கு ஒருவன் ஒத்துவராமல் நியாயத்திற்குக் கட்டுப்பட மறுக்கிறான். மற்ற இருவர் தங்களுக்குச் சேர வேண்டிய பாகத்தைப் பெற என்ன செய்ய வேண்டும்?**

உயிலில் கண்டுள்ளபடி சொத்தை பாகப் பிரிவினை செய்யவும், பாகமான சொத்தைத் தனிச் சுவாதீனம் செய்து தருவதற்காகவும் வழக்கைத் தாக்கல் செய்யவும் இருவரும் சேர்ந்தோ, அல்லது ஒருவர் மட்டும் தனியாகவோ, ஒத்து வர மறுப்பவர் மீது வழக்குத் தொடரலாம்.

**க. சங்கர், ஜோதி நகர், செங்கை மாவட்டம்.**

**காவல்துறை அதிகாரிகள் எவரையும் எப்போது வேண்டுமானாலும் கைது செய்ய முடியுமா?**

'எவரையும் எப்போது வேண்டுமானாலும்' என்று தாராளமாக வரம்பு கடந்து கைது செய்ய முடியாது.

காவல்துறையின் 'கைது செய்யும் அதிகாரங்கள்' இரண்டு வகைப்படும்.

ஒன்று — குற்ற இயல் நீதிபதி (மாஜிஸ்ட்ரேட்) பிறப்பித்த உத்திரவு அல்லது பிடியாணை (வாரண்ட்)யின் கீழ் கைது செய்யும் அதிகாரம். அவற்றைப் 'பிடியாணை வேண்டும்' குற்றங்கள் எனலாம்.

இரண்டு — குற்ற இயல் நீதிபதியின் பிடியாணை இன்றியே காவலர் மேற்கொள்ளும் 'கைது செய்யும் அதிகாரம்.' அவற்றைப் பிடியாணை வேண்டாக் குற்றங்கள் எனலாம்.

குற்ற இயல் நடைமுறை விதித் தொகுப்பின் முதலாவது அட்டவணையில் 'பிடியாணை



# நெருப்பு மலர் வாசகர் கருத்து

* தியாக உள்ளமும், தூய காதலும் ஒருசேர அமையப்பெற்ற விதத்தில் 'நெருப்பு மலரை' இந்துமதி படைத்திருந்தார்.

போடி நாயக்கனூர், எஸ். சையதுமுகமது.

* சாம்பலை மறுபடியும் எரிக்க முடியுமாப்பா எனக் கேட்பதன் மூலம் கிருத்திகா தனது எதிர்காலத்தைப் பற்றிக் கோடிட்டுக் காட்டுகிறாள். இந்துமதியின் நெருப்புமலர் வாசகர்கள் மனத்தை நெகிழச் செய்த மகிழ மலர்.

தஞ்சாவூர், அ. சம்பத்.

* கிருத்திகா பாஸ்கரப்பாவுடன் கூர்க்கிற்குச் சென்றது எங்கள் குடும்பத்தில் ஒருவர் செல்வது போல் இருந்தது. ஆனாலும் ஆசிரியரின் கூற்றுப்படி

'திடமானவர்கள் அழமாட்டார்கள்.''
''தீர்க்கமானவர்கள் அழமாட்டார்கள்''
''கம்பீரமானவர்கள் அழமாட்டார்கள்''

நானும் அழவில்லை!

கருப்பம்புலம், வி. சிவஞானம்.

* நெருப்பு மலருக்கு அழகான ஓவியங்கள் மூலம் உயிர் கொடுத்திட்ட மாருதியின் கைவண்ணத்திற்குப் பாராட்டுக்கள்.''

உளுந்தூர் வெளிக்கடை, டி. ராஜன்.

* நெருப்புமலர் நெஞ்சமெல்லாம் கரையச் செய்த பனிமலர் — பாசமலர். என்றும் எங்கள் மனம் தேடிடும் வாசமலர்.

போடிநாயக்கனூர், கவி கண்ணன்.

* சாயிராம் போன்ற சுயநலமில்லாத நண்பன் கிடைத்ததற்குக் கிருத்திகா பெரும் தவம் செய்திருக்க வேண்டும்.

தூத்துக்குடி—6, அன்னபூரணி.

* 'உங்களுக்கு முன்னால் அதெல்லாம் எனக்குத் தூசிக்குச் சமங்க. அன்பா இருக்கிறதையும், மனித உறவுகளைக் காப்பாத்தறதையும் விடவா இதெல்லாம் பெரிசு' — பரவசப் படுத்தும் இதுபோன்ற சுவையான பற்பல வரிகளால் பிரதிவாரமும் எங்களை மகிழ்வித்துவந்த 'நெருப்பு மலர்' அருமையான படைப்பு!

கூடலூர், பி. டி. திலகவதி.



வேண்டும் குற்றங்களும்,' 'பிடியாணைவேண்டாக் குற்றங்களும்' குறிப்பிடப்பட்டுள்ளன எனவே காவல்துறை அதிகாரிகள் நடந்து கொள்ளும் விதம் நடைபெற்றுள்ள குற்றத்தைப் பொறுத்து அமைய வேண்டும்.

ல. லலிதா, எழும்பூர், சென்னை—8.

**உயிலொன்றும் எழுதாமல் ஐந்து ஆண்டுகளுக்கு முன் இறந்துபோன இந்து விதவையின் சொத்துக்களில், மகனுக்கும், மகளுக்கும் சமபங்கு கிடைக்குமா? அல்லது மகளுக்கு மட்டும் பூராச் சொத்துக்களும் சேருமா?**

''மகனுக்கும், மகளுக்கும் சமபங்கு கிடைக்குமே அன்றி, பூராச் சொத்துக்களும் மகளுக்கு மட்டும் சேராது.

ஏனென்றால்:

1956—ஆம் வருடத்திய இந்திய மரபுரிமைச் சட்டத்தின், 15—வது 16—வது விதிகளின்படி, உயிலொன்றும் எழுதாமல் இறந்து போன, ஓர் இந்துப் பெண்மணியின் முழு உரிமையான சொத்துக்கள் வரிசைப் படிக் கீழ்க்கண்ட வாரிசுகளையே சேரும். ஒரு வரிசைக்கு ஆளில்லை என்றாலே அடுத்த வரிசைக்குச் செல்ல வேண்டும். ஒரே வரிசையில் உள்ளவர்கள் அனைவருக்கும் சம உரிமை உண்டு.

முதலாவதாக: மகன்கள், மகள்கள், கணவன், (முன்னரே இறந்து போன மகனின், மகளின் குழந்தைகளும் இதில் அடங்குவர்.)

இரண்டாவதாக: கணவனின் வாரிசுகள்

மூன்றாவதாக: தாயாரும் தந்தையும்.

நான்காவதாக: தந்தையின் வாரிசுகள்.

இறுதியாக: தாயாரின் வாரிசுகள்.

ஆனால்:

ஒரு இந்துப் பெண் மரபுரிமையாகத் தன் தந்தையிடமிருந்தோ, தாயிடமிருந்தோ அடைந்த சொத்தானது, மகனோ, மகளோ (முன்னரே இறந்து போன மகனின், மகளின் குழந்தைகள் உட்பட) இல்லாத போது, வரிசையில் கண்ட மற்ற வாரிசுகளுக்கு இன்றி, தகப்பனாரின் வாரிசுகளுக்கே சேரும்.

ஒரு இந்துப் பெண் மரபுரிமையாக, தன் கணவரிடமிருந்தோ, மாமனாரிடமிருந்தோ பெற்ற சொத்தானது, மகனோ, மகளோ, (முன்னரே இறந்து போன மகனின், மகளின் குழந்தைகள் உட்பட) இல்லாதபோது, வரிசையில் கண்ட மற்ற வாரிசுகளுக்கு இன்றி, கணவரின் வாரிசுகளுக்கே சேரும்.

வி. ருக்மணி, பெங்களூர்.

**எனக்கு என் பெற்றோரால் அளிக்கப்பட்ட தங்க நகைகள், மற்றும் வெள்ளிச்சாமான்களை நான் எனது இஷ்டப்படி யாருக்கு வேண்டுமானாலும், உயில் எழுதி அளிக்க உரிமை உண்டா? உயில் என் கைப்பட நானே எழுதிக் கையெழுத்திட்டால் போதுமா? சாட்சிகள் வேண்டுமா? எத்தனை சாட்சிகள்? உயிலைப் பதிவு செய்ய வேண்டுமா?**

நேயர்களுக்குப் புத்தாண்டுப் பரிசு!



# சுஜாதா;
# வாசந்தி;
# வைரமுத்து!

# கல்கி

ஏப்ரல் 14 புத்தாண்டுச் சிறப்பிதழ்

**இளைஞர்களுக்கு உபயோகமான இனிய அம்சங்கள்**

அதிக பக்கங்கள் - அதே விலை!

திருமணத்திற்கு முன்போ, திருமணத்தின் போதோ, திருமணத்திற்குப் பின்போ பெண்ணுக்குக் கொடையாகக் கிடைக்கும் சீதனச் சொத்துக்களையும் பெண் தன் கைத்திறத்தாலும் உழைப்பினாலும் பெறும் எல்லாச் சொத்துக்களையும் பாகப்பிரிவினையாலோ, மரபுரிமையினாலோ பெண் சட்டப்படியான நிபந்தனைகள் இன்றிப் பெற்ற சொத்துக்களையும், சட்டம் வருவதற்கு முன்போ, பின்போ பெண் தன் உடைமையில் கொண்டிருக்கும் எல்லாச் சொத்துக்களையும் பெண்களுக்கே வரையற்று முழு உரிமை ஆக்கி உள்ளது, 1956—ஆம் வருடத்திய இந்து மரபுரிமைச் சட்டம்.

ஆகையால், உங்களுடைய தங்க நகைகள், வெள்ளிச் சாமான்கள், இன்னுமிருக்கிற தட்டு முட்டுச் சாமான்களைக் கூட நீங்கள் உயில் மூலமாகவோ, வேறு வகைகளிலோ, உங்கள் விருப்பப்படி எவருக்கு வேண்டுமானாலும் அளிக்கலாம்.

உயிலைப் பற்றிய உங்கள் வினாக்களுக்கு, 21.10.84 'கல்கி' தீபாவளிச் சிறப்பிதழில் தரப்பட்டுள்ள பதில்கள் பொருந்தும்.

**மேஜர்தாசன், எஸ்.பி.பி.காலனி, ஈரோடு.**

**நாம் ஒரு பொருளைப் பார்சல் மூலம் லாரியிலோ, ரயில் மூலமாகவோ அனுப்பினால், அப்பொருள் சேதம் அடைந்துவிடவோ, காணாமற்போகவோ செய்தால், நஷ்டத் தொகையைப் பெற என்ன செய்ய வேண்டும்?**

லாரி மூலம் அனுப்பப்பட்ட பொருள்கள் காணாமற் போனாலோ, சேதப்பட்டாலோ, ஒப்படைக்கப்படாவிட்டாலோ, லாரியின் சொந்தக்காரரிடமிருந்து, நஷ்டத் தொகையைக் 'காரியர்ஸ் ஆக்ட் 1865' என்ற சட்டத்தின் 8—வது விதிப்படி பெற முடியும்.

9—வது விதிப்படி, பொருள் காணாமற் போனதையோ, சேதப்பட்டதையோ, ஒப்படைக்கத் தவறியதையோ மட்டும் நிரூபித்தால் போதும். லாரி சொந்தக்காரர், அவருடைய பிரதிநிதி அல்லது வேலை ஆட்களின் கவனக் குறைவையோ குற்றச் செயலையோ நிரூபிக்க வேண்டியதில்லை.

ஆனால்—

நூறு ரூபாய்க்கு மேற்பட்ட மதிப்புடைய சரக்குகளின் நஷ்டத்தைப் பெற வேண்டுமானால், முன் கூட்டியே சரக்கை அனுப்புபவரோ அல்லது அவருடைய பிரதிநிதியோ, லாரி சொந்தக்காரரிடமோ அல்லது அவரது பிரதிநிதியிடமோ சரக்கின் மதிப்பைத் தெரிவித்திருக்க வேண்டும்.

தாவா தாக்கல் செய்வதற்கு முன்பு, நஷ்டம் ஏற்பட்டதைத் தெரிந்து கொண்ட ஆறு மாத காலத்திற்குள், லாரி உரிமையாளருக்கு முன் அறிவிப்பு (நோட்டீஸ்) தரவேண்டும் என்று அந்தச் சட்டத்தின் 10—வது விதி வலியுறுத்துகிறது.

ரயிலுக்குப் போவோமா? சரக்குகள் காணாமற்போனாலோ, அழிந்துவிட்டாலோ, நஷ்டப்பட்டாலோ, ஒப்படைக்கப்படாவிட்டாலோ பொதுவாக ரயில்வே நிர்வாகம் பொறுப்பேற்கவேண்டும். ஆனால் ரயில்வே நிர்வாகத்தின் அஜாக்கிரதையையும், தவறான செயல்களையும் நிரூபித்தாக வேண்டும். மேலும், வெள்ளம், தீ, போர், போன்றவற்றில் ஏற்படும் சேதங்களுக்கு ரயில்வே நிர்வாகம் பொறுப்பேற்காது. அதுமட்டுமா, சரக்குகளை ஏற்றுக் கொண்ட, சரக்குகள் சென்றடைய வேண்டிய இடைப்பட்ட தடத்திலுள்ள எல்லா ரயில்வே நிர்வாகப் பிரிவுகளையும் தாவாவில் சேர்க்கவேண்டும். ரயில்வேயின் பொது மேலாளருக்கும் (ஜெனரல் மானேஜர்) முறைப்படியாக நோட்டீசு அனுப்பப்பட வேண்டும்.

அப்பாடா, ஒரு வழியாகத் தாவா தாக்கல் செய்யத் தயாராகிவிட்டீர்கள். நஷ்டஈட்டுத் தொகை கைக்கு எப்போது வந்து சேரும் என்று யோசிக்கிறீர்களா? அவசரப்படக்கூடாது. தாவா முடிய வேண்டாமா? ''பொறுமை கடலினும் பெரிது'' என்பது ஆன்றோர்களின் வாக்கு.

**என். திருமால், சென்னை—29.**

**எனக்கு 25.5.81—ல் திருமணம் நடந்தது. மனைவி என்னைப் பிடிக்கவில்லை என்று ஒரு மாதத்தில் பிரிந்துவிட்டாள். மனுச் செய்து நான் விவாகரத்து டிகிரியை எக்ஸ்பார்ட்டியாகப் பெற்றுக் கொண்டேன். தனிமையில் 4 ஆண்டுகளாகக் கஷ்டப்படுகிறேன். இனி மேல் திருமணம் செய்து கொள்ளலாமா?**

விவாகரத்து டிகிரி எக்ஸ்பார்ட்டியாகப் பிறப்பிக்கப்பட்ட தேதியிலிருந்து முப்பது நாட்களுக்குள் அல்லது வழக்கின் சம்மனைப் பிரதிவாதி பெற்றுக் கொள்ளாமலிருந்தால் எக்ஸ்பார்ட்டி டிகிரியைப் பற்றி அவர் அறிந்து கொண்டதிலிருந்து முப்பது நாட்களுக்குள் எக்ஸ்பார்ட்டி டிகிரியை ரத்துச் செய்ய மனுச் செய்ய வேண்டும். உங்கள் மனைவி அப்படிச் செய்யத் தவறியிருந்தால், நான்கு ஆண்டுகள் முடிந்த இந்த நிலையில் நீங்கள் மறுமணம் செய்து கொள்ளத் தடை ஏதும் காணோம்!

''கம்பெனி உன் விவகாரத்தில் தலையிட்டதுக்காக உன்னை வேலையை விட்டு நீக்கிவிட்டதா சொன்னியே அப்படி என்ன செய்தே?''

''கம்பெனி மானேஜருக்கும், ஸ்டெனோவுக்கும் இருந்த தொடர்பில் தலையிட்டேன்.''

— கிழை அ. கதிர்வேல்



இது இளைஞர் ஆண்டு

# இளமைக்கு வயது 119

ஜே. எம். எஸ்.

வெண்ணிற தாடியும் பொக்கை வாய்ச் சிரிப்புமாக ஜப்பானியத் தீவுக் கிராமம் ஒன்றில் நடமாடிக் கொண்டிருக்கிறார் முதியவர் ஷிகிசியூ இஜுமி. உலகிலேயே மூத்தவராகக் கருதப்படும் அவருக்கு வயது 119.

தென் ஜப்பானிய டோக்குனோஷிமா தீவில் ஆசான் என்ற கிராமத்தில் அமைதியாகவும், மகிழ்ச்சியாகவும் வாழ்ந்து கொண்டிருக்கிறார் இஜுமி. உலகிலேயே வயதான மனிதராக கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற்றிருக்கிறார் இவர்.

மனிதன் முதன் முதலாகச் சந்திரனில் காலடி எடுத்து வைத்தபோது அவருக்கு வயது நூறுக்குமேல்.

ஹிரோஷிமாவில் முதலாவது அணுகுண்டு விழுந்தபோது அவருடைய வயது எண்பது.

ரஷ்யாவில் சோஷலிசப் புரட்சி வெடித்த சமயத்தில் இஜுமிக்கு வயது ஐம்பது

இப்படி ஒரு நூற்றாண்டுக்கு மேற்பட்ட சரித்திரங்களையும் சம்பவங்களையும் அரிய நினைவுகளாக எண்ணிப்பார்க்கும் அனுபவம் அவருக்குத்தான் உண்டு.

இரண்டாவது உலகப் போரின் போது பொழியப்பட்ட குண்டுகள்தான் கெட்ட கனவு போல் தமக்குத் தோன்றுகிறது என்கிறார் இஜுமி.

கரும்பு விளையும் சின்னஞ்சிறு ஜப்பானியத் தீவில் 1865 ஜூன் மாதம் 29-ம் தேதி பிறந்தவர் அவர். நீண்ட காலம் ஆரோக்கியமாக வாழ்ந்து சாதனையை ஏற்படுத்த வேண்டும் என்பது இஜுமியின் இளமைக் கனவு. கரும்புத் தீவிலேயே காலத்தைக் கழித்து வரும் அவர் கடுமையான உழைப்பாளி.

இஜுமி ஒருமுறை மட்டுமே மணம் செய்து கொண்டார். இரண்டு பிள்ளைகள். அவர்களிலிருந்து பேரப் பிள்ளைகள்... கொள்ளுப் பேரப் பிள்ளைகள் என்று இப்பொழுது குடும்பம் பெருகி விட்டது. வயது ஆக ஆக அவருடைய உடல்நலம் நன்றாக இருப்பதாகச் சொல்கிறார் கொள்ளுப் பேரனின் மனைவி.

உதய நேரத்தில் உறக்கத்திலிருந்து எழுந்து விடுகிறார் அவர். ஷிரோ என்ற நாய் அவரைக் காலாற நடந்து வர அழைத்துப்போகிறது. பிறகு, மீன், காய்கறிக்கலவையுடன் அரிசி உணவும், சூடான தேனீரும் அருந்துகிறார்.

ஜப்பானின் முன்னைய பிரதமர் சுஸுகி அன்பளிப்பாக வழங்கிய டெலிவிஷன் பெட்டியின் முன் உட்கார்ந்து நிகழ்ச்சிகளைப் பார்க்கிறார். சுமோ எனப்படும் ஜப்பானிய மல்யுத்த நிகழ்ச்சியை டெலிவிஷனில் பார்ப்பது மிகவும் பிடித்த பொழுது போக்கு. மாலை நேரத்திலும் நடக்கச் செல்கிறார் இஜுமி. பிறகு இரவு உணவு காலை உணவைப் போன்றே. ஆனால் தேனீருக்குப் பதிலாகக் கரும்புச் சாற்றிலிருந்து வடித்த 'சோச்சு' என்னும் சாராயம் அருந்துகிறார்.

இரண்டு வருடங்களுக்குமுன் புகைப் பிடிக்கும் பழக்கத்தை விட்டு விட்டார். பசி எடுத்த பிறகே சாப்பிட உட்கார்வதாகக் கூறுகிறார். இந்த வயதில் தமது ஆடைகளை மற்றவர் உதவியில்லாமல் துவைத்து

அணிந்து கொள்கிறார். நூறு மீட்டர் தூரத்தில் அவருடைய பார்வையின் எல்லை ஒன்றை மக்கள் வைத்திருப்பதால் அன்றாடம் அந்த இடத்துக்குப் போய் வருகிறார் இஜுமி.

அண்மையில் வெளிவந்த அவருடைய சுயசரிதையை அவ்வப்போது படிக்கிறார். நீண்ட காலம் வாழ்வது பற்றிய ரகசியங்களை அந்தப் புத்தகத்தில் எழுதியிருக்கிறார். இயற்கையான உணவை உண்டு அளவாக சோச்சு அல்லது சாகே சாராயத்தைப் பருகி, திறந்த வெளியில் எளிய வாழ்க்கை வாழ்வதே தமது ஆயுள் ரகசியம் என்று இஜுமி எழுதியுள்ளார்.

இவற்றுக்கெல்லாம் மேலாக இறைவனின் சித்தமே இவ்வளவு காலம் தாம் ஆரோக்கியமாக உயிர் வாழ்வதற்குக் காரணம் என்று இஜுமி சொல்கிறார்.

"நான் கவலைப்படுவதில்லை. எல்லாவற்றையுமே கடவுளின் பொறுப்பில் விட்டுவிடுகிறேன். இயற்கையோடு இணைந்து வாழ்கிறேன். என் இதயம் சூரியனோடு தொடர்புடையது. அந்தத் தொடர்பு துண்டிக்கப்படும் வரை நான் வாழ்வேன். அதுவரை மகிழ்ச்சியாக வாழ்ந்து முடிப்பேன்" என்கிறார்.

இஜுமியை அவ்வப்போது கவனித்துக் கொள்கிறார் ஒரு மருத்துவர். ஆனால் அந்த மருத்துவருக்கு வேலை இருப்பதில்லை.

"மிக ஆரோக்கியமான நிலையில் இஜுமி இருந்து வருகிறார். இருதயம் மட்டும் கொஞ்சம் பலவீனம். மற்றபடி ஐம்பது வயதுடைய ஒருவரின் உடல் உறுப்புக்களைப் போன்றே அனைத்தும் இயங்குகின்றன. தோலில் கூட முதுமைச் சுருக்கங்கள் அதிகம் இல்லை" என்பது அந்த மருத்துவரின் கருத்து.

இஜுமி நான்கு அடி எட்டு அங்குல உயரம் உடையவர். எடை 84 பவுண்டு. அவரைப்பற்றி டெலிவிஷன் படங்கள் எடுக்கப்பட்டிருக்கின்றன. ஜப்பானியப் பேரரசர் ஹிரோஹிதோவைச் சந்திக்க வேண்டும் என்பது அவருடைய ஆசை.

உலகில் ஏற்பட்டுள்ள விஞ்ஞான வளர்ச்சிகளை வியந்து பேசுகிறார் இஜுமி. மின்சார சமையல் அடுப்பு, குக்கர், சலவை இயந்திரம் இவையெல்லாம் வீட்டு வேலைகளை எப்படியெப்படியோ சுலபமாக்கிவிட்டனவே என்று வியக்கிறார்.

120 வயதை எட்டிப் பிடித்துக் கொண்டிருக்கும் அவரைப் பார்க்க உல்லாசப் பயணிகள் மேக்குனோஷிமாத்தீவுக்கு வந்தவண்ணம் இருக்கிறார்கள். அன்றாடம் இருநூறு பேர் வரை அவரைக் காண வருகிறார்கள். அன்பளிப்பாகப் பணம் தந்துவிட்டுப் போகிறார்கள். நகராட்சித் துறை அவருக்கு ஓய்வு ஊதியம் அளித்து வருகிறது.

ஜப்பானில் 100 வயதைத் தாண்டிய 1563 பேர் இப்பொழுது இருப்பதாக அரசாங்கம் தெரிவித்திருக்கிறது. ஆக மூத்தவர் இஜுமிதான்.


இன்றிரவு மார்ச் 14ல 9.30—க்கு
விவிதபாரதி சென்னை, திருச்சி வானொலி

கல்கி வழங்கும்

நேரம் நல்ல நேரம்



தயாரிப்பு: எஸ். வி. ரமணன்.
படம்: சுபா.




## வட்டமேஜை.

* டி. டி. வாசுவின் பேட்டி ரொம்ப ருசிகரமாக இருந்தது. எனக்கு இரட்டை சந்தோஷம். வாசுவும் நானும் பி. எஸ். ஹைஸ்கூலில் கிளாஸ்மேட்ஸ். அன்று முதல் இன்று வரை நெருங்கிய நண்பர்கள்.

டி. டி. கே. அவர்களை பார்த்துப் பேசும் பாக்கியம் எனக்கு உண்டு. பெரிய மேதை. அவருடைய மகன் இப்படி உயர்ந்திருப்பதில் எனக்கு ஆச்சரியமில்லை.

சென்னை—17. வி. கோபாலகிருஷ்ணன்.

* இலங்கை தமிழர்களின் பிரச்னையைப் பொறுத்தவரை, நமது பிரதமர், இன்னமும் மௌனம் சாதிப்பது நியாயம்தானா? இனியும் இந்தப் பிரச்னையில் ஏனோதானோ என்றில்லாமல், இலங்கைத் தமிழர்களின் துயர் துடைக்க ஆவன செய்ய வேண்டும்.

திருச்சி—20. ஆர். அப்துல்சலாம்.

* பரத நாட்டிய பாதுகாப்புச் சட்டம் படித்தேன். கிண்டலும் ஹாஸ்யமும் கலந்த நல்ல ஹாஸ்யக் கட்டுரை. கமிஷன் அறிக்கை, கோர்ட் வழக்கு, நீதிபதியின் அறியாமை, வஞ்சிக் கோட்டை, வாழ்க்கை நையாண்டி இடைச் செருகல், இறுதியில் அனுராதா முத்தாய்ப்பு, எல்லா அலங்காரம் கொண்டவையர்.

செகந்திராபாத். சுபஸ்ரீ.

* "கலைஞர் பெற்றெடுத்த குழந்தை (குறளோவியம்) விழாவிலே அவர் பெற்ற பெண் குழந்தை கூறிய நகைச்சுவை மிகப் பிரமாதம்."

குத்தாலம். நா. சேதுராமன்

* ஒவ்வொரு வாரமும் இந்தவார 'வாசகர் பங்'கில் உன் பங்கு இருக்கிறதா? என்று கேள்வி கேட்டுத் துளைக்கும் நண்பர்களிடையே தனக்கு ஏற்பட்ட தர்ம சங்கடத்தை எந்த வாசகருமே எழுதவில்லையா, என்ன?

சென்னை—14. ஞயாறு எஸ். வாசுதேவன்.

* இந்தியப் பொருளாதாரம் கறுப்புப் பணத்தால் சீரழிகிறது என்பதை விளக்க (தென்னை மரம் — யானை) கார்ட்டூன் படு ஜோர்.

சென்னை—56. டாக்டர் நாவலர்தாசன்.

* 20.1.85—ம் தேதி கல்கி இதழில் மாணவர் பக்கம் பகுதியில் குமாரி தேனமிர்தஷியாமளா, எழுதியுள்ள செய்திக்கு, அப்பாசமுத்திரம் வனச்சரக அலுவலர் என்ற முறையில் விளக்கமும், மறுப்பும் தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளேன்.



சம்பவம் நடைபெற்றது உண்மை என்றாலும் கட்டுரையில் பல தவறுகள் உள்ளன. முதலாவது அது சிங்கவால் குரங்கோ, கருங்குரங்கோ, **Common Langoor** இலைக் குரங்கோ அல்ல. சாதாரண நாட்டுக் குரங்கே. சம்பவம் 25.6.84 ம் தேதி நடைபெற்றது. திரு ராஜசேகரன் என்பவரால் தந்தி கொடுக்கப்பட்டது. மேற்படி நிகழ்ச்சி அம்பலவாணபுரம், சிவந்திபுரம் பகுதியில் நடைபெற்றதாக இருந்தமையால், அப்பகுதிகள் 27.6.84—ம் தேதி அந்தப் பிரிவு வனப் பணியாளர்களால் தணிக்கை செய்யப்பட்டு உண்மை நிலைமையினை அறிக்கை செய்துள்ளனர். எனவே வனத்துறையினர் நடவடிக்கை எடுக்கவில்லை எனக் குற்றப் படுத்துவது தவறாகும்.

அம்பாசமுத்திரம். ஆ. பிலிப் ஜான்.

* அகதிகளாகக் கண்ணீருடன் வந்து சேரும் ஈழத்தமிழர்கள் மண்டபம் முகாமில் மட்டுமின்றி அதற்கு வெளியே வந்தும் அமைதியாக வாழ முடியவில்லை. மண்டபம் முகாமிலேயே புரோக்கர்கள் இவர்களை அணுகித் தோட்ட வேலைகளுக்கு ஆள் பிடிக்கிறார்கள். 100, 150 என்று முன்பணமும் தந்து இடமும் ஏற்பாடு செய்து மிகக் குறைந்த கூலிக்கு வேலையில் அமர்த்தப்படுகிறார்கள். அவர்கள் தொடர்ந்து அங்கேயே இருத்தல் வேண்டும் என்பதற்காக அவர்களது குடும்ப அட்டை, உணவுச் சீட்டு இவற்றை முதலாளிகள் வாங்கி வைத்துக் கொள்கிறார்கள். இனி அகதிகள் கொத்தடிமைகள்தான்.

அகதிகளுக்கு வணிகக் கடன் ரூபாய் 3000, வீட்டுக் கடன் 8000, (நகர்ப்புறம்) அல்லது 4000 (கிராமப்புறம்) பெற்றுக் கொள்ள அரசு வகை செய்துள்ளது. அந்தத் தொகையைப் பெற்றுத் தருவதாகச் சொல்லி புரோக்கர்கள் குறுக்கிட்டுப் பலவாறு செயல்பட்டுப் பல்லாயிரக்கணக்கில் சம்பாதித்து விடுகிறார்கள். அகதிகளுக்கான கடன் தொகையில் பெரும் பங்கை அடைபவர்கள் புரோக்கர்களே.

அகதிகள் யார் தயவும் இன்றி உதவித் தொகை பெற விதிமுறைகளை எளிமையாக்குதல் வேண்டும். அல்லது எளிய 'ரெடிமேட்' வீடுகளை அரசு கட்டிக் கொடுத்தால் என்ன?

தஞ்சை. இறைவன்.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது.)

# இலங்கைத் தமிழர் துயர் இங்கும் தொடர்கிறது


மத்தியிலும்
மாநிலங்களிலும்
ஒரே கட்சி
ஆட்சி
தேவை


எச்சரிக்கை
கர்நாடகம், ஆந்திரம்
சிக்கிம் மாநிலங்
களில் எதிர்க்
கட்சிகளின் ஆட்சி!




மக்கள்


கேரள
ஆளும் கட்சி
கூட்டணி அரசு


என் படகு
கவுந்துடலே!


50
சத விகிதம்
மின்
வெட்டு


தமிழக
அரசு



# கல்கி

1985 மார்ச் 17
மலர்: 43 இதழ்: 33
ரக்தாக்ஷி பங்குனி 4



# அலை ஓய்ந்தது!

அரசியல் ஜோதிடர்கள் பலரை வாயடைத்துப் போக வைத்துள்ளது கர்நாடகா தேர்தல் முடிவுகள். நாடாளுமன்றத் தேர்தலில் அங்கு இ.காங்கிரஸ் பெற்ற அபரிமிதமான வெற்றியானது ஹெக்டே ஆட்சி அங்கு தொடருமா என்ற பெரிய கேள்விக்குறியை எழுப்பியிருந்தது. ஆனால் மத்திய ஆட்சி வேறு, மாநில ஆட்சி வேறு என்று இனம் பிரித்து வோட்டுப் போட எங்களுக்குத் தெரியும் என்று கர்நாடகத்தின் மக்கள் (முன்பு தமிழக மக்கள் செய்தது போல) உணர்த்தியுள்ளார்கள். ஜனதா மாபெரும் வெற்றி பெற்றுள்ளது. ஹெக்டேயின் சொந்தப் பிராபல்யம் மட்டுமின்றி அவரது ஆட்சியின் நேர்மையும் திறமையும் வாக்குகளைப் பெற்றுத் தந்துள்ளன.

எந்தெந்த மாநிலங்களில் மத்திய அரசு தேவையின்றித் தலையிட்டுக் குழப்பம் விளைவிக்கப் பார்த்ததோ அங்கெல்லாம் இ. காங்கிரஸ் படு தோல்வி அடைந்திருப்பதைக் கண்டு அக்கட்சி பாடம் கற்க வேண்டும். ஆந்திராவில் ராமராவ் டிஸ்மிஸ் செய்யப்பட்டதும் கர்நாடகாவில் எம்.எல். ஏக்களை விலைபேச முயன்ற விவகாரமும் சிக்கிம்மில் அநீதியான முறையில் முதல்வர் பண்டாரி பத்து மாதங்களுக்குமுன் டிஸ்மிஸ் செய்யப்பட்டதும் "பூமராங்" ஆயுதம் போல் இ. காங்கிரஸையே திரும்பிவந்து தாக்கியுள்ளது. ஜனநாயக மரபுகளை நீங்கள் அறியாவிட்டாலும் நாங்கள் உங்களுக்குச் சொல்லிக் கொடுப்போம் என்று மத்திய இ. காங்கிரஸ் ஆட்சிக்கு மக்கள் உணர்த்தியிருக்கிறார்கள். மாநில ஆட்சிகளைக் கவிழ்க்கும் முயற்சிகளுக்கு இடம் தர மாட்டோம்; மாற்றுக்கட்சியினர் மாநிலங்களில் பதவியில் இருப்பதை மத்திய அரசு ஒப்புக் கொள்வதுடன் ஒத்துழைப்பும் தரவேண்டும் என்றெல்லாம் பாடம் புகட்டியுள்ளனர். மத்தியிலும், மாநிலத்திலும் ஒரே கட்சி ஆட்சி இருப்பதுதான் நாட்டுக்கு நல்லது என்ற ராஜீவ்காந்தியின் வெற்று வேட்டு வாதத்தை இம்மாநில மக்கள் நிராகரித்துள்ளனர்.

வடமாநிலங்கள் பலவற்றில் இ. காங்கிரஸ் ஆட்சி அமைந்திருப்பதென்னவோ உண்மைதான். ஆனால் சென்ற டிசம்பர் தேர்தலுடன் ஒப்பிடும் போது இந்த மார்ச் தேர்தலில் அவர்கள் அடைந்துள்ள இடங்களும், வோட்டுக்களும் கணிசமாகக் குறைந்து போயிருப்பதைக் காணலாம். எனவே, இந்திரா அனுதாப அலை ஓய்ந்து கொண்டிருக்கிறது என்பதையும் இனிச் செயல் திறனை வைத்தே மக்கள் இ. காங்கிரஸ் ஆட்சிகளை மத்தியிலும் மாநிலத்திலும் எடைபோடுவார்கள் என்பதையும் அக்கட்சியினர் புரிந்து கொண்டு எச்சரிக்கை அடைய வேண்டும்.

எதிர்த் தரப்பு வோட்டுக்கள் சிதறாமல் இருந்திருந்தால் வடமாநிலங்களிலும் இந்தத் தேர்தலின் முடிவுகள் வேறுவிதமாய் இருந்திருக்கும். தங்கள் சுயநலப் போக்கு, செல்வாக்கு மிக்க ஒரே தேசிய எதிர்க்கட்சி உருவாவதற்குத் தடையாக உள்ளது; ஜனநாயகத்துக்குத் துணைபுரியவில்லை; ஏக கட்சி ஆட்சி தொடர்ந்து நீடித்துச் சர்வாதிகார மனப்பான்மை வளரவே, உதவுகிறது என்பதை எதிர்க்கட்சித் தலைவர்கள் என்றுதான் புரிந்து கொள்ளப் போகிறார்களோ?

## ஏழு நாடுகளில் எட்டு வாரங்கள்

# பாரிஸ் பக்கத்தில் பரமஹம்சர் ஆசிரமம்

21

**நா. பார்த்தசாரதி**

நான் தங்கியிருந்த 'எடரெய்ன் வில் லிக்கு' அருகே ஓர் அழகிய சூழலில் இராமகிருஷ்ண மிஷனின் கிளை ஒன்று இயங்குவதாகவும், அதில் சுவாமி ரித்ஜானந்தா என்ற தமிழறிஞர் இருப்பதாகவும் அவரை அவசியம் சந்திக்க வேண்டும் என்றும் நண்பர் ஜனார்த்தனி கூறியிருந்தார். இராமகிருஷ்ண பரமஹம்ஸரைப் பற்றியும், விவேகானந்தரைப் பற்றியும், பல பிரெஞ்சு வெளியீடுகளை அவர்கள் வெளியிட்டிருப்பதாகவும், அங்கே பல ஜெர்மானியர்கள், பிரெஞ்சு மக்கள், ஸ்விட்ஜர்லாந்தினர், வந்து தங்கி அமைதியும், தியானப் பயனும் அடைவதாகவும் சொன்னார்கள். 'சாந்திர் வேதாந்திக் ராமகிருஷ்ண' — என்று பிரெஞ்சு மொழியில் அந்த ஆசிரமத்தை அழைத்தார்கள்.

இந்த ஆசிரமம் இரம்யமான சூழலில் அமைந்துள்ளது. பல ஏக்கர் பரப்புள்ள பெரிய தோட்டத்தின் இடையே ஒரு பழங்காலப் பாணியிலான பிரெஞ்சு மாளிகையில் இந்த 'சென்டர்' உள்ளது. பரமஹம்ஸரின்மேல் ஈடுபாடுள்ள யாரோ ஒரு பிரெஞ்சுக்காரர் இந்நிலத்தைக் கொடுத்திருக்க வேண்டும். ஆசிரமப் புல்வெளியில் பசுக்கள் மேய்ந்து கொண்டிருந்தன. ஆசிரமத்தில் வந்து தங்குவோருக்கான சிறுசிறு விடுதிகள் பிரதான மாளிகையிலிருந்து சிறிது தொலைவு தள்ளியிருந்தன. ஆசிரம உணவுத் தேவைகளுக்கான பால், பழம், காய்கறி, சிறிதளவு கோதுமை, எல்லாம் அவர்கள் நில எல்லைக்குள்ளேயே கிடைக்குமாறு செய்து கொண்டிருந்தார்கள். சுவாமி ரித்ஜானந்தா வயது முதிர்ந்தவர். பல ஆண்டுக் காலமாக ஐரோப்பிய இராமகிருஷ்ண மிஷன் சென்டர்களிலேயே தொடர்ந்து இருப்பதால், ஆங்கிலம், பிரெஞ்சு, சிறிது ஜெர்மன், எல்லாம் நன்கு அறிந்திருந்தார். தமிழ் மொழியை மறந்துவிடாமல் சரளமாகப் பேசினார். கனிவாகப் பழகினார். நான் அங்கே சென்றிருந்த போது லண்டன் ராமகிருஷ்ண மிஷன் சென்டரைச் சேர்ந்த சுவாமியும் தற்செயலாக அங்கு வந்து தங்கியிருந்தார். அவரையும் சந்தித்து அளவளாவ முடிந்தது.

கண்ணுக்கெட்டிய தூரம் பரந்து கிடந்த ஆசிரமப் புல்வெளியில் சில இடங்களில் செர்ரி மரங்களிலிருந்து சிவப்புப் பழங்கள் உதிர்ந்து அழகாகச் சிதறியிருந்தன. சுவாமி ரித்ஜானந்தா என்னையும் ஜனார்த்தனியையும் பகலுணவுக்கு அங்கேயே இருந்துவிட்டுத்தான் செல்ல வேண்டும் என்று வற்புறுத்தினார்.



பாரீஸில் பாடிலன் மாதா கோவில்

பிரெஞ்சுக்காரர்களும், ஜெர்மானியர்களும், வேறு பல ஐரோப்பிய இனத்தவரும் அன்னபூர்ண ஸ்தோத்திரம் சொல்லி இராமகிருஷ்ண மிஷன் முறைப்படி சுலோகங்களை உணவுக்கு முன்னும் பின்னும் கூறி 'சத்குரு நாதருக்கு வெற்றி' என்று பொருள்படும் முத்தாய்ப்பு வாக்கியத்துடன் முடித்தது மெய்சிலிர்க்க வைக்கும் அநுபவமாக இருந்தது.

முழுமையான சாத்விக உணவுதான். பூரி, பருப்பு, காய்கறிகள் பழங்கள், சாதம், என்று எல்லாம் இருந்தாலும் பிரெஞ்சுக் கலாச்சாரப்படி உணவின் முடிவில் சீஸ் (பாலாடைக் கட்டி) வழங்கப்பட்டது. பல்வேறு வாசனைகள், கலவைகளில் கிடைக்கிற நூற்றுக்கணக்காக சீஸ் வெரைட்டிகளில் மிளகுத்தூள் தூவப்பட்ட

பெப்பர் ஃப்ளேவர்ட் சீஸ்' வழங்கப்பட்டிருந்தது அன்று. ஆசிரமவாசிகளுக்கு அறிமுகப் படுத்தியதுடன், கட்டிடம், பிரசுரப் பகுதி எல்லாவற்றையும் சுற்றிக் காட்டி அன்புடன் விடைகொடுத்தார் சுவாமி ரித்ஜானந்தா.

இதற்கு அடுத்தபடி மறக்க முடியாத சந்திப்பு பாரதியாரின் குயில்பாட்டைப் பிரெஞ்சு மொழியில் பெயர்த்துப் புகழ்பெற்றுள்ள துரைசாமி தம்பதிகளுடையது. இவர்களை நான் சந்திக்க நேர்ந்தது ஒரு விநோதமான அனுபவம். ஜூலை 14-ந் தேதி பிரெஞ்சு தேசிய தின அணிவகுப்பு ஊர்வலத்தைக் (நமது டில்லி ரிபப்ளிக் டே பரேடு போன்றது.) காண்பதற்காக அதிகாலையிலேயே எழுந்து தயாராகிப் பாரிஸ் போய் நன்றாகக் காண முடிந்த இடமாகப் பார்த்து நானும் நண்பர் ஜனார்த்தனியும் நின்று கொண்டோம். தேசிய தின அணிவகுப்பு முடிந்து கலைந்த கூட்டத்தின் நெரிசலில் தற்செயலாகத் துரைசாமி தம்பதிகளைச் சந்தித்தோம். திருமதி. துரைசாமி கல்கியில் வாராவாரம் தொடராக மணிபல்லவம் படித்ததைக் கூறி அந்த நாவல் தம்மைப் பொறுத்தவரை மறக்க முடியாத ஒரு காவியம் என்றார். அவர்கள் வசித்த 'வீமெய்ல்' பகுதிக்கு வந்து விருந்துண்ணுமாறு அழைத்தனர். துரைசாமி தம்பதிகள் எத்தனை ஆண்டுகளானாலும் 'மணிபல்வத்தை'ப் பிரெஞ்சு மொழியில் பெயர்த்து வெளியிடுவது என்ற முயற்சியில் மகிழ்ச்சியோடு ஈடுபட்டுள்ளனர். துரைசாமி ஏற்கெனவே என்னுடைய 'கொத்தடிமைகள்' சிறுகதைத் தொகுதியைப் பிரெஞ்சில் மொழிபெயர்த்து முடித்துவிட்டார். பல ஆண்டுகளாகப் பாரிஸில் அறிவியல் துறைப் பேராசிரியராக இருக்கும் துரைசாமி பாண்டிச்சேரி மாநிலத்தைச் சேர்ந்தவர். பிரெஞ்சுக்காரர்களே வியக்கும் அளவு அம்மொழியைக் கையாளும் திறன் பெற்றவர். அவருடைய குயில் பாட்டு மொழிபெயர்ப்புப் பிரதியைப் பிரியத்தோடு எனக்கு அளித்தார். அன்போடு ஏற்றுக்கொண்டேன்.

பாரிஸில் நம் நாட்டுக் கேரள அன்பர்கள் நடத்தி வரும் மகாராணி ஓட்டலில் பிரான்ஸ் தமிழ்ச்சங்கம் எனக்காக ஒரு வரவேற்பு நிகழ்ச்சிக்குச் சிறப்பாக ஏற்பாடு செய்திருந்தது. டால்பின் பல்கலைக் கழகத் தமிழியல் துறைத் தலைவர் பேராசிரியர் காசி வரவேற்புக்குத் தலைமை வகித்தார். சங்கச் செயலாளர் மார்செலான், தசரதன், முதலியோர் சுறுசுறுப்பாக ஏற்பாடுகளைக் கவனித்தனர். அன்பர்கள் என்னுடைய இலக்கியப் பணியைப் பாராட்டிப் பேசியபின் என்னைச் சொற்பொழிவு செய்ய அழைத்தனர். அரை மணிநேரம் தமிழிலக்கியத்தின் தற்கால நிலை பற்றிப் பேசினேன். கேள்விகளுக்கு விரிவாகப் பதிலளித்தேன். நமது பாண்டிச்சேரி மாநிலத்தின் ஒரு பகுதி மலையாளத்து 'மாஹி' உள்ளது. அந்த மாஹியைச் சேர்ந்த ஓவியக் கலைஞர் கே. பி. மோகன்குமார் பாரிஸில் ரிபப்ளிக் மெட்ரோ நிலையத்தினருகே உள்ள 'நோத்தர்தாம் தெ நாஸேத்' தெருவில் ஒரு

ஜெனிவாவில் ஒரு தோற்றம்



கலைக்கூடம் நிறுவியுள்ளார். அவர் குடியிருப்பும் அங்கேயே உள்ளது. அவர் இந்தியக் கலை இலக்கியப் பண்பாட்டு உணர்வுகளை இணைப்பதில் பேரார்வம் காட்டும் அன்பர். அவருடைய கலைக் கூடத்தில் பல இந்திய நண்பர்களையும், பிரெஞ்சு நண்பர்களையும் அழைத்து என் வருகையை ஒட்டி ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தார். "1985—ல் இந்தியத் திருவிழா **(Festival of India)** பிரான்ஸில் கொண்டாடப்பட இருக்கிறது. அதற்குள்ளாவது இங்குள்ள தென்னிந்திய நண்பர்களின் கலை முயற்சிகளை ஒன்று படுத்தி ஆயத்தமாக்கிவிட முயன்று வருகிறேன்" என்று சுறுசுறுப்பாக முழங்கினார் மோகன்குமார். காடாகத் தாடி மண்டியிருந்த அவர் முகத்தில் அப்போது தென்பட்ட நம்பிக்கையை அவரது கண்களின் கூரிய பார்வையிலிருந்து உறுதி செய்து கொண்டேன் நான். பாரிஸில் இந்தக் கலைஞர் ஓர் அபூர்வமான மனிதர். நம்பிக்கை நட்சத்திரம்.

இலங்கைத் தமிழர் பிரச்னை பற்றிய கூட்டங்களில் கலந்து கொள்ள அமெரிக்கா சென்று திரும்புகிற வழியில் முன்னாள் சபா நாயகர் க. ராசாராம், ப. நெடுமாறன், முதலியோரும் அதேசமயம் பாரிஸுக்கு வந்திருந்தனர். நிறைய இலங்கைத் தமிழர்கள் பாரிஸில் உள்ளனர். அவர்கள் நடத்திய கூட்டங்களில் நெடுமாறன் முதலியோர் பேசினார்கள். இலங்கைப் பிரச்னை மட்டுமின்றிப் பல சர்வதேசப் பிரச்னைகளில் பாரிஸ் முக்கியமான களமாகிவிடுகிறது. கருத்துச் சுதந்திர வாய்ப்பும் பல நாட்டார் பாரிஸில் இருப்பதுமே இதற்கு முக்கிய காரணங்கள்.

இப்போதெல்லாம் வரவரச் சகிப்புத் தன்மைக்குப் புகழ்பெற்ற பிரெஞ்சுக்காரர்களும் சலிப்படைந்து மாறுவது தெரிகிறது. "ஆஃப்ரிகன்ஸ் கோ ஹோம்" "அராப்ஸ் கோ ஹோம்". — போன்ற வாசகங்கள் மெட்ரோ நிலையச் சுவர்களில் பெரிதாகவே எழுதப்பட்டுள்ளன. ஒரு காலத்தில் பிரெஞ்சுக் காலனிகளாயிருந்த பல நாடுகளைச் சேர்ந்த மக்கள் பாரிஸில் நிறையக் குடியேறிவிட்டனர். இது பிரெஞ்சுக்காரர்களுக்கே சலிப்பையும், வெறுப்பையும் கொடுத்துள்ளது. வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரித்துள்ளது. "நிறவெறிக்கும், வெறுப்புக்கும், இந்தப் போட்டியும், வேலை வாய்ப்புப் பாதிப்புமே முக்கிய காரணங்கள் என்று படுகிறது. உரிமைகள் வேலை நேரம் என்று கரூராயிராமல் தொழிற்சட்டங்களை அதிகம் வற்புறுத்தாமல் மாடாக உழைப்பதால் சில வெள்ளை அதிபர்களே கறுப்பர்களுக்கு வேலை வாய்ப்பை அதிகம் தருவதாகவும் ஒரு புகார் சொல்லப்படுகிறது.

நான் பிரான்ஸில் இருந்தபோது மித்தராந்த் அரசுக்குச் சோதனையான காலம். எல்லா மெட்ரோ நிலையங்களிலும் கம்யூனிஸ்ட் ஊழியர்கள் 'பிரெஞ்சு அரசு முற்போக்குத் திட்டங்களைச் செயல்படுத்தும் திராணியற்றதாகிவிட்டதால் கூட்டணியிலிருந்து தாங்கள் 'விலகிக் கொண்டதாக'த் துண்டுப் பிரசுரங்களை விநியோகித்தார்கள். 'ஃபிரான்கோ மித்தராந்த்' பிற்போக்காளராக வர்ணிக்கப்பட்டார். அரசியல் கூட்டணி, முற்போக்கு, பிற்போக்கு முத்திரை குத்துவது, எல்லாம் நம்மூர் மாதிரியே இருந்தன.

நான் முன்பு 1976—ல் காணாத பல மாற்றங்கள் பாரிஸில் இப்போது தெரிந்தன. திருடு போவது சகஜமாகியிருந்தது. 'டிராவலர்ஸ் செக்கை' பிக்பாக்கெட் கொடுத்து விட்டுப் புகார் செய்கிற டூரிஸ்ட்டுகளின் கியூ 'சிடி பாங்க்' முகப்பில் பெரிதாக நீளமாக இருந்தது. அழுக்கு, குப்பைக் கூளம், சுவரில் எழுதுவது அதிகமாகியிருந்தது. கண்ணாடி ஜன்னல்களை உடைப்பது, ரயிலில் ஸ்கெட்ச் பென், ஆணி முதலியவற்றால் கண்டபடி கிறுக்குவது எல்லாம் வந்திருந்தன. பென்ஸ் கார்களைத் திருடுவது வழக்கமாகியிருந்தது.

ஈஃபில் கோபுரம், வார்செய்ல்ஸ் அரண்மனை, லூவர் மியூஸியம், லக்ஸம்பர்க் பூங்கா, ஸேன் நதி, நோத்தர் தாம் சர்ச், எல்லாம் அப்படியேதான் இருந்தன. 'பிகாலில்' ப்ளூ பிலிம் தவிர லைவ் ஷோவேதான் பறந்து கொண்டிருந்தது. பத்துப் பிராங்க் கொடுத்தால் மூன்று கராத்தே சினிமாவைத் தொடர்ந்து காட்டினார்கள்.

'ஹோட்டல் டி வில்லி' மெட்ரோவின் அருகே, பொம்பிடு அதிபராயிருந்த **(Pompidu)** காலத்தில் உருவான 'இன்டர்நேஷனல் செண்டர் ஆஃப் ஆர்ட் அண்ட் கல்சர்' என்ற உருக்கு மாளிகை பலரைக் கவர்ந்து கொண்டிருந்தது. பாரிஸில் தங்கியிருந்த நாட்களிலும், பாரிஸைச் சுற்றிப் பயணம் செய்த நாட்களிலும், பாசத்தோடு பழகி உடன்வந்து விருந்துபசாரம் செய்த ஜனார்த்தனி குடும்பத்தினர், சுந்தரமூர்த்தி தம்பதியர், துரைசாமித் தம்பதிகள், ரங்கா, பாய்லி ரவீந்திரன், மார்செலான்/தமிழகம் போயிருந்தாலும் நண்பர்களிடம் என்னை ஒருகுறைவுமில்லாமல் கவனித்துக்கொள்ளச் சொல்லிவிட்டுப் போன முடியப்ப நாதன், ஜமால், இவர்கள் பற்றிய பசுமையான நினைவுகளை எல்லாம் மனத்தில் பதித்துக் கொண்டு ஜூலை மாதம் 21—ந்தேதி அதிகாலையில் ஸ்விஸ் ஏர் விமானம் மூலம் சார்ல் தெகால் நிலையத்திலிருந்து ஜெனீவாவுக்குப் புறப்பட்டேன். பாரிஸின் நண்பர்கள், இனிய நறுமணங்கள், நளினமான நினைவுகள் மெட்ரோ ரயிலின் கூட்ட நெரிசலில் அவ்வப்போது நினைவில் பட்டுப் பதிந்துவிட்ட அறிமுகமில்லாத பல அழகிய முகங்கள், கண்கள், புன்முறுவல்கள், ரோஜா நிற இதழ்கள், பொன்நிறக் கூந்தல்கள் எல்லாம் மனத்தின் அடியில் போய்த் தங்கிவிடப் பசுமையான ஸ்விட்சர்லாந்தின் மலைகளும் ஏரிகளும் விமானத்திலிருந்து கண்ணுக்குத் தெரிய ஆரம்பித்தன.

(தொடரும்)

# சிறிதே சாதுர்யம் தேவை, கேசம் பெறுகிறது இளமை!





வாழ்க்கையின் குறிப்பிட்ட ஒரு நேரத்தில் கேசம் நரைக்கத் துவங்குகிறது. இளமை அத்துடன் முடிவடைந்துவிட்டதாக நீங்களும் எண்ணி விடுகிறீர்கள். அது வெறும் பிரமைதான். சிறிதே சாதுர்யமாக செயல்பட்டால் இத்தகைய தவறான பிரமை விலகிவிடும்.

**கேள்வி:** கேசத்திற்கு ஹேர் டை எப்போது உபயோகிக்கத் துவங்கலாம்?

பதில் : கேசம் நரைப்பதற்கு குறிப்பிட்ட வயது என்று எதுவும் கிடையாது. அதனால், நரைக்கும் அறிகுறி தோன்றியதுமே கேசத்துக்கு ஹேர் டை உபயோகிக்கலாம்.

**கேள்வி:** ஆனால் ஹேர் டை செய்வது என்பது பெரும் தொல்லையும், மிகுந்த நேரம் தேவைப்படும் விஷயமும் அன்றோ?

பதில் : நீங்கள் கண்டகண்ட ஹேர் டைகளை வாங்கி உபயோகித்தால் அப்படி நேரக்கூடும். ஆனால் கோத்ரெஜ் ஹேர் டை உபயோகிப்பது மிகவும் எளிது. காரணம் இது தானாகவே பரவி விடுகிறது.

**கேள்வி:** அடிக்கடி ஹேர் டை உபயோகித்தால் கேசத்திற்குக் கெடுதல் ஏற்படக்கூடுமா?

பதில் : உயர்தரக ஹேர் டையாக இருந்தால் சிறிதும் கெடுதல் இல்லை. அதாவது, கோத்ரெஜ் ஹேர்டை கேசத்துக்குக் கருமை யூட்டுவது மட்டுமல்லாது, அதை அழகுறச் செய்து பளபளப்பும் அளிக்கிறது.

**கேள்வி:** கோத்ரெஜ் ஹேர் டையினால் துணிகள், தலையணைகள் இவற்றில் கறைகள் ஏற்படுகின்றனவா?

பதில் : கோத்ரெஜ் ஹேர் டையினால் அப்படி ஏற்படாது. காரணம்; அது மற்ற ஹேர் டைகளைப்போல் கேசத்தின் மேற்பகுதியில் தங்கி விடாமல் கீழ்ப்பகுதிவரை ஊடுருவிச் செயல்புரிகிறது.

**கேள்வி:** கோத்ரெஜ் ஹேர் டை எவ்வளவு நாட்களுக்கு செயல் திறனை நீடித்து வைக்கின்றது?

பதில் : குறைந்த பட்சம் மூன்று-நான்கு வாரங்களுக்கு.

**கேள்வி:** கோத்ரெஜ் ஹேர் டையின் மூலம் கேசத்தை டை செய்தபின் வழக்கம்போல் தலையை அலசிக்கொள்ள முடியுமல்லவா?

பதில் : ஆம். கேசத்தை நல்ல ஷாம்பூ போட்டு அலசவும். பிறகு அதன்மீது ஹேர் ஆயில் அல்லது க்ரீம் போட்டுக் கொள்ளலாம்.

**கேள்வி:** ஹேர் டையினால் ஒருவித துர்நாற்றம் வீசுகிறது என்கிறார்களே?

பதில் : வேறு ஹேர் டைகளைப் பொறுத்தவரை இவ்விதமாக இருக்கக்கூடும். ஆனால் கோத்ரெஜ் ஹேர் டையில் நல்ல நறுமணம் உண்டு. தவிர இதில் கண்டிஷனரும் உள்ளது.

**கேள்வி:** கோத்ரெஜ் ஹேர் டை பற்றி வேறு ஏதேனும் கூற முடியுமா?

பதில் : கோத்ரெஜ் லிக்விட் ஹேர் டை 20 மிலி மற்றும் 40 மிலி. பாட்டில்களில் கிடைக்கிறது. இரண்டு ஷேடுகளில். டார்க் ப்ரௌன் மற்றும் நேச்சுரல் ப்ளாக். உங்கள் கேசத்தின் இயற்கையான வண்ணத்துக்கேற்றதைத் தேர்ந்தெடுங்கள்.




**Godrej**

கோத்ரெஜ்
பர்மனென்ட் லிக்விட்
ஹேர்டை

**தெரிந்தவர்களுக்கு மட்டுமல்ல
உபயோகிக்க விரும்பும் புதியவர்களுக்கும்**

கோத்ரெஜ் தயாரிப்பு.

CLARION/B/GS/22/203 TML

**3**

பார்ப்பதற்குச் சிவப்பாய் அழகாய் இருந்த பலராமன், பழகுவதற்கு வித்தியாசமானவனாய் இருந்தான் என்பதைப் புரிந்து கொள்ள ரொம்ப நாட்கள் ஆகவில்லை ராஜத்திற்கு.

மோகம் முப்பது நாள், ஆசை அறுபது நாள் என்று மொத்தம் தொண்ணூறு நாட்கள் கணக்குச் சொல்வார்கள்.

தொண்ணூறு நாட்களுக்குள்ளாகவே, ராஜத்திற்கு எல்லாம் அலுத்துப் போயிற்று.

குடித்தனம் ஆரம்பித்த சில நாட்களில் அவளையே சுற்றிச் சுற்றி வந்தான்.

"ராஜம்... ஒன் கண் ரொம்ப அழகு."

ரத்த ஓட்டம் அதிகரித்துக் காதுமடல்கள் சிவக்க அவனையே பார்ப்பாள்.

"அடுப்படிலே இன்னும் என்ன பண்ணிண்டிருக்கே?"

இரவு எட்டரை மணிக்கே படுக்கையில் படுத்துக் கொண்டு பெரிதாய்க் குரல்கொடுப்பான்.

"சமையலறையை அலம்பிவிட்டுட்டு வந்துடறேன்... நாளைக்கு வெள்ளிக்கிழமை.."

"வெள்ளிக்கிழமை வாரா வாரம்தான் வரது. எல்லாம் அடுத்த வெள்ளிக்கிழமை பார்த்துக்கலாம். சீக்கிரமா வா..."

கணவனின் அவசரம் கண்டு அவள் ஆசையில் மேலிட்டுப் போட்டது போட்டபடி ஓடிவருவாள்.

சில நாட்கள், நண்பகலில் கையில் பொட்டலத்துடன் வருவான்.

பகலெல்லாம் வீட்டுவேலை முடித்துவிட்டுச் சற்று ஓய்வாகக் கண்ணை மூடிப் படுத்திருக்கும் போது 'பட்பட்'வெனக் கதவைத் தட்டுவான்.

"இந்தா... அல்வா புதுசா இப்பத்தான் போட்டது. சுடச்சுட ஒனக்குன்னு கொண்டு வந்தேன்..."

வாங்க நீட்டிய கையைச் சட்டென்று பற்றுவான்.

பிடியின் அழுத்தம் கையை வலிக்கும்.

"நான் வரப் போறேன்னு ஒனக்கு எப்படித் தெரியும்?..."

ஏன் கேக்கறேள்?... எனக்குத் தெரியாதே?..." திகைப்புடன் கேட்பாள் ராஜம்.

"இல்லே பாயை விரிச்சு வச்சிருக்கியே, அதான் கேட்டேன்..."

வெட்கத்துடன் அவன் ஆலிங்கனத்தில் ஆழ்ந்து போவாள் ராஜம்.

வாழ்க்கை இப்படியே சில நாட்கள் சென்றது.

மாலா வயிற்றுக்குள் வடிவெடுத்துக் கொண்டிருந்தாள்.

இரவு எட்டு, எட்டரைக்கு வந்து கொண்டிருந்தவன், கொஞ்சம் கொஞ்சமாய்த் தாமதமாய் வரலானான்.

முதலில் இதைக் கவனிக்காமல் 'ஏதாவது வேலையாய் இருக்கும்' என்றும் விட்டுவிட்டவள், ஒருநாள் இரவு வரவே இல்லை என்றபோதுதான் திடுக்கிட்டுப் போனாள்.

மறுநாள் காலை கண்ணெல்லாம் சிவந்து, தலை கலைந்து வீட்டுக்குள் வந்தவனைப் பார்க்க அச்சமாயிருந்தது.

"ஏன் ராத்திரி வரல்லே? எங்கே போயிருந்தேள்?..."

சாதாரணமாய்த்தான் கேட்டாள.

சர்ப்பமாய்த் தலைநிமிர்ந்தவனைப் பார்க்கவே நடுக்கமாயிருந்தது. "ஏன் மகாராணிகிட்டே உத்தரவு வாங்கணுமோ?... என் இஷ்டம் எப்ப வேணுமானாலும் வருவேன்... சரி... சீக்கிரம் சாப்பாட்டைப் போடு... வேலைக்குப் போகணும் நாழியாச்சு..."

அன்றிரவும் வரவில்லை.

மறுநாள் காலை அவன் வந்த முறையிலிருந்தே, கண்களின் சிவப்பிலிருந்தே, நடையின் தள்ளாட்டத்திலிருந்தே அவன் நேற்றிரவு எங்கே போயிருந்தான் என்று தெரிந்து போயிற்று.

குடிக்கக் கூடாததை எல்லாம் குடித்திருக்கிறான் என்று அறிந்ததும் துடித்துப்போனாள்.

அப்புறம் இது வாடிக்கையாகிப் போயிற்று.

மட்டச் சரக்குகளையெல்லாம் குடிக்கிறவன் என்று தெரிந்ததும் மனம் முறிந்து போயிற்று.

வாங்குகிற சம்பளம் குடிப்பதற்கே போதாமல் வீட்டில் தட்டுப்பாடு தலையெடுக்கலாயிற்று.

"ஏதாவது காசு இருக்கா?" என்று கேட்டுச் சமையலறைக் காலி டப்பாக்களைக் குடைந்து எதுவும் இல்லையென்று தெரிந்து அவளை அடிக்க ஆரம்பித்ததும்தான் தனது நிலையின் பரிதாபம் அவளுக்குப் புரிந்தது.

அம்மாவிடம் சொல்லிக் கணவனைத் திருத்த முடியுமா என்று பார்த்தாள்.

விஷயம் அறிந்த ராஜத்தின் அம்மா சகஜமாக "பல்ராமா... ராஜம் என்னவோ சொல்றாளே?..." என்று ஆரம்பிக்கும் முன்னரே

# புதிதாய்ப் பிறந்தாள்

ஜெயரதன்



இடியாய் முழங்கினான்.

"ஏ... கிழவி...! ஏதாவது இனிமே பேசினே மரியாதை கெட்டுப் போயிடும்... இஷ்டமிருந்தா இருக்கட்டும்... இல்லேன்னா உன் வீட்டுக்குக் கூட்டிண்டு போயிடு..." என்றவன் ராஜத்தின் கூந்தலை இடதுகையால் பற்றினான். 'பளார், பளார்' என்று ராஜத்தின் கன்னங்களில் அறைந்தான். "என்னடி... அம்மா சிபாரிசா...? ரெண்டுப் பொட்டச்சிகளும் என்னடி பண்ணுவீங்க?.. என் இஷ்டப்படிதான் இருப்பேன்..."

தடுக்க வந்த ராஜத்தின் தாயாருக்கும் பிரசாதமாய் இரண்டு அறைகள் முகத்தில் விழுந்தன.

பாறைகள் நிறைந்த பாழுங்கிணற்றில் பெண்ணைத் தள்ளிவிட்டோம் என்று அறிந்து கொண்ட ராஜத்தின் தாயாருக்கு அந்த அதிர்ச்சியிலிருந்து மீள முடியவில்லை.

பெண்ணின் துயரத்தை அதிகநாள் பார்க்க விருப்பமில்லாமல், புருஷனிடம் சிபாரிசு செய்ய ஒருநாள் சொல்லாமல் கொள்ளாமல் புருஷனிருப்பிடம் போய்ச் சேர்ந்தாள்.

வடிகாலாய் இருந்த அம்மாவின் துணையும் போன பின்பு ராஜத்தின் நிலை மிகவும் மோசமாயிற்று.

பலராமனின் ஆர்ப்பாட்டங்கள் அதிகமாயின.

கையிலிருந்த அரைப்பவுன் வளையல்கள் அவனது ஒருவார சீட்டாட்டத்திற்கு விலையாகிப் போயின. அவளிடம் இருந்த ஒரே ஒரு நல்ல புடவையும் அவனது சாராய சுகத்திற்காக மார்வாடிக் கடையில் அடைக்கலம் புகுந்தது.

ஒன்றிரண்டு பித்தளைப் பாத்திரங்களும் கணநேர சுகத்திற்காக அற்ப விலைக்குப் போயின.

இந்த நிலையிலே தான் மாலா பிறந்தாள்.

"பொண்ணா...? பிள்ளையைப் பெத்துக் குடுக்க வக்கில்லே... தரித்திரச்சனியன்..." என்று மாலா பிறந்த மூன்றும் நாள் ராஜத்தின் கன்னத்தை ரத்தம் வருமாறு நிமிண்டி விட்டுப் போனான்.

வாழ்க்கை சிலருக்குச் சிவப்புக் கம்பளம் விரிக்கிறது.

மாலா பிறந்த பின், ராஜத்திற்கு வாழ்க்கை ரத்தக் கம்பளமாய்ப் போயிற்று.

முள் கிரீடம் என்பார்கள். ராஜத்திற்கு முள் போர்வையாகப் போயிற்று.

இப்போதெல்லாம் வீட்டிலேயே சீட்டுக் கச்சேரி நடக்கலாயிற்று. சிநேகிதர்களுடன்

சாராயப் பரிவர்த்தனை நிகழத்தொடங்கியது.

ராஜம் என்கிற பெயர் போய் 'சனியன்' என்ற செல்லப் பெயர் சேர்ந்து கொண்டது.

மாலா, பலராமனின் பூரண வெறுப்புக்கு ஆளானாள்.

என்ன செய்வதென்றே தெரியாமல் துயரச் சகதிக்குள் சோகச் சுமையுடன் நாள் நாளாய் அமிழலானாள் ராஜம்.

இப்படி நாட்கள் நடந்து கொண்டிருக்கும் பொழுதுதான், வீட்டிற்கு இன்னொருத்தியை அழைத்துக் கொண்டு வந்தான் பலராமன்.

உயரமாய், பருமனாய், மதமதவென்று கண்களில் வேசித்தனம் வழிய வந்து நின்றவளைக் கண்டதும் துடித்துப் போனாள் ராஜம்.

அடிவயிற்றில் பனிக்கத்தி இறங்கிற்று.

''யாரு இவ?...''

''யாரா?... பாத்தாத் தெரியல்லியா?... இனிமே இங்கேதான் இருக்கப் போறா... அவ முகம் கோணாம நடந்துக்கணும்... ஏதாவது ஏறுமாறு நடந்துதோ கொன்னுடுவேன்... நீ வா... மனோ... அது கிடக்கு''

இடுப்பில் கைவளைத்து உள்ளே அழைத்துக் கொண்டு போனான். ''எனக்குப் பயமா இருக்குதுங்க'' என்று அவள் செல்லமாய்ச் சிணுங்கியதும் ''நான் இருக்கிற போது நீ ஏண்டாக் கண்ணு பயப்படுறே?... அது வெறும் தரித்திர மூதேவி... மூஞ்சிலேயே முழிக்காதே...'' என்று அவளை அவன் சமாதானப்படுத்துவதும் ராஜத்திற்குக் காதில் விழுந்தன.

''யாரும்மா... அந்த மாமி?... என்னையே முழிச்சுப் பார்க்கிறா?...'' என்றது மாலா.

கந்தல் புடவையின் கதகதப்பில் மகளை அணைத்துக் கொண்டு மௌனமாய்க் கண்ணீர் விட்டாள் ராஜம்.

பலராமனை மட்டும் சமாளித்த ராஜத்திற்கு இப்போதெல்லாம் மனோன்மணியையும் சமாளிக்க வேண்டியிருந்தது.

ஒரு பெண்ணுக்குக் கொடுமை செய்வதில் ஆணை விட, பெண் மிக மோசமானவளாக இருக்கிறாள் என்பதை ராஜம் நன்கு புரிந்து கொள்ள வாய்ப்புகள் கிடைத்தன.

படுக்கையறையை விட்டே வெளியே வராமல் தர்பார் செய்து கொண்டிருந்தாள் மனோன்மணி. அவள் விரலசைவுக்கே ஊழியம் செய்ய வேண்டியிருந்தது ராஜத்திற்கு.

மனோன்மணியின் திட்டல்களுக்கும் ஏவல்களுக்கும் தான் மட்டும் அல்லாமல் மாலாவையும் அவள் பழக்கிக் கொண்டிருந்த போதுதான், அந்தச் சம்பவம் நிகழ்ந்தது.

'அம்மா, பயமா இருக்கும்மா... என்னை விட்டுப் போகாதேம்மா...' என்று, கடுங்காய்ச்சலில் அரற்றிக் கொண்டிருந்த மாலாவை மடியில் கிடத்தி ஆசுவாசப்படுத்திக் கொண்டிருந்தாள் ராஜம்.

அப்போது அவளை மனோன்மணி கூப்பிட்டிருப்பாள் போலிருக்கிறது. அவள் காதுகளில் விழவில்லை. சற்று நேரம் கழித்துப்


**கோகுலம் வாங்குவது செலவல்ல:**
**உங்கள் குழந்தையின் எதிர்காலத்தில் முதலீடு!**

# கோகுலம்



**இரட்டிப்புப் பலன்:**

**சிறந்த குழந்தைகள் பத்திரிகை;**

**முழுநீள வண்ணச் சித்திரக்கதை.**

**96 பக்கங்கள்: விலை: இரண்டே ரூபாய்.**

**கதைகள் * கவிதைகள் * சிரிப்புத் துணுக்குகள் * அறிவியல் விஷயங்க...**



## அருள்வாக்கு

பசுவின் முகத்தில் மஞ்சள் குங்குமமிட்டு, கொம்பிலே குஞ்சலம் கட்டி, கழுத்திலே மாலைகள் போட்டு மணிகள் கட்டினால் பார்க்க ரொம்ப அழகாகத்தானிருக்கிறது. நமக்குப் பல தினுசில் உபகாரம் பண்ணும் பசுவைப் போற்றுவதில் **Psychological satisfaction** இருப்பது போலவே, இப்படி அந்தக் கோமாதாவை அலங்காரம் பண்ணிப் பார்ப்பதில் **artististic satisfaction** (கலை ரீதியில் திருப்தி) உண்டாகிறது. ஆனாலும் பசுவுக்கு அர்ச்சனை பண்ணுவது என்றால் அப்போது அதன் முகத்திலே பண்ணாமல் பிருஷ்ட பாகத்திலே (வால் புறத்திலே) தான் அர்ச்சிக்க வேண்டும். நமக்கு அது பிடிக்கிறதா, பிடிக்கவில்லையா இப்படி பண்ணுவதற்குக் காரணம் உண்டா இல்லையா என்ற கேள்விக்கு இடமில்லை. இப்போது நமக்கு ஒவ்வொன்றுகக் காரணம் தெரிகின்ற அநேக ஆசார விதிகளை ஏற்படுத்திய ரிஷிகள் காரணம் இல்லாமலா, 'பசுவின் முகத்தில் பூஜை பண்ணாதே, பின் பக்கம் பண்ணு; அங்கே தான் லக்ஷ்மி வாஸம் பண்ணுகிறாள்' என்று சொல்வார்கள். நம்பிப் பண்ண வேண்டும். அப்போது அங்கே வாஸம் பண்ணும் லக்ஷ்மி தெரிவாள். ஸைக்கலாஜிகலாகவோ, வேறு விதங்களிலோ நம்மை 'ஸாடிஸ்ஃபை' பண்ணவிட்டாலும் ஸரி, நாம் சாஸ்திரங்களுக்கு அடங்கி அடிபணிந்து அதன் பிரகாரம் தான் செய்ய வேண்டும். எல்லா "ஸாடிஸ்ஃபாக்ஷன்" களையும் விட ஆத்ம ஸாடிஸ்பாக்ஷனுக்காகத்தான் சாஸ்திராசாரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அதுதான் எக்காலத்துக்குமான "ஸாடிஸ்ஃபாக்ஷன்." மற்ற "ஸாடிஸ்ஃபாக்ஷ" னெல்லாம் அடுத்த நிமிஷமே பறந்து போய் "டிஸ் ஸாடிஸ்ஃபாக்ஷனி" ல் கொண்டு விடுபவைதான்.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

பிடரியைப் பிடித்து யாரோ உலுப்பவும் திடுக்கிட்டுத் திரும்பினான்.

பலராமன் தான், நின்றுகொண்டிருந்தான்.

"...ஒனக்கென்னடி அத்தனை திமிர்?... அனாதை நாயே! மனோ எத்தனை தடவை வாய் வலிக்க ஒன்னைக்கூப்பிடுவா?... திரும்பிக் கூடப் பார்க்காம ஒக்காந்திருக்கியே...?"

அவனது முழங்கால் இடியாய் அவள் விலாவில் இறங்கிற்று. துடித்துப் போனான்.

"மாலா காய்ச்சல்லே மொனகிண்டிருந்தா... அதிலே கவனமா இருந்ததாலே காதிலே விழலே... இதோ வந்துட்டேன்.." என்று எழ முயன்றவனைப் பிடித்துத் தள்ளினான். முகமே பிய்ந்து போகுமாறு அறைந்தான்.

"காதிலேயாடி விழலே, காதுலே?..: திமிருடி ஒனக்கு... இவளுக்கு எதுக்குச் செய்யறதுன்னு ஏழைக் குசும்புடி ஒனக்கு..."

பின்பு அவளையும் மாலாவையும் தரதரவென்று கூந்தலைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய் வீட்டிற்கு வெளியே தள்ளினான். "போ... போய்டு. இனிமே இந்த வீட்லே ஒனக்கு எடம் கெடையாது... வாசப்படிலே காலை வச்சியோ வெட்டிடுவேன்.."

கதவை அறைந்து தாழிட்டான்.

அவள் அழுகைகளும் அரற்றல்களும் எதுவுமே அவன் காதுகளில் விழவில்லை.

அப்போது மாலாவுக்கு வயது நான்கு.

வயிற்றில் சிவா இரண்டு மாதம்.

கதவையே திறக்காத வீட்டு வாயிலில் எவ்வளவு நேரம்தான் நிற்பது?

நின்றான். கால் கடுக்க, மாலாவின் உடல் கைகளில் தகிக்க நின்றான்.

சற்றுநேரம் கழித்து மனோன்மணியும் பலராமனும் கதவைப் பூட்டிக் கொண்டு வெளியே போனார்கள்.

வெகுநேரம் கழித்துக் காத்திருந்தும் இருவரும் வராமல் போகவே தவித்துப்போனான்.

என்ன செய்வது? எங்கே போவது?

மனம் கலங்கித் தவித்த போதுதான் தன் அம்மாவின் கிராமத்து ஓட்டுவீடு நினைவுக்கு வந்தது.

பூட்டித்தானே இருக்கிறது!

புது நம்பிக்கை ஊக்கம் தர, பக்கத்துவீட்டில் பஸ் சார்ஜ் கடன் வாங்கிக்கொண்டு பிறந்த வீடு போய்ச் சேர்ந்தாள்.

அன்புள்ள மூதாட்டி மாதிரி ஆதுரத்துடன் அவளை வரவேற்று ஏற்றுக் கொண்டது அந்த வீடு.

(தொடரும்)

அந்த ஊர் 'ஹள்ளி,' நமது கள்ளிச்செடி கிராமங்கள் போலத்தான் தோன்றியது. ஆனாலும் தெருவில் இரண்டு பக்கமும், வீடுகள் இடைவெளியில்லாமல் நீண்ட நெடுஞ்சுவர்களாக இருந்தன. ஆங்காங்கே தோன்றிய கதவுகளைக் கொண்டுதான் அவற்றைத் தனித்தனி வீடுகள் என்று அநுமானிக்க முடியும்.

ஏதாவது ஒரு இடத்தில் நிற்க வேண்டுமே என்று நின்று பார்த்தபோது, ராமர் கோவில் என்னை வரவேற்றது. கோவிலுக்குள் பத்து சதுர அடி மரப்பலகையில் ராமபிரான், சீதா தேவி, லட்சுமணர் இருபுறம் துலங்க, ஆஞ்சநேயர் காலடியில் கையூன்ற ஓவியப்பட்டு நின்றார். அந்தப் படத்துக்கு முன்னால், விதவிதமான மாக்கோலங்கள்; கோவிலுக்குள் போய்க் கும்பிடு போட்டுவிட்டு, சுவரெங்கிலும், மகிஷாசுர மர்த்தினி, ஈஸ்வரன், கணபதி, கிருஷ்ணன், மாரியம்மா, சாமுண்டீஸ்வரி ஆகிய தெய்வப் படங்களுக்கு இடையே மகாத்மா காந்தி, ஜவஹர்லால் நேரு, படங்களையும் ஒருசேரக் கண்டபடி நின்றேன். நான்கைந்து பேர் 'தாயபாஸ்' ஆடிக் கொண்டிருந்தார்கள். விரல் நீட்டம் உள்ள, வெள்ளிப் புள்ளிகள் கொண்ட துண்டுகளை ஒருவர் உருட்டுகிறார். பிறகு பிறருடைய ஆலோசனையின்படி, மரக்காய்களை, கட்டங்களுக்குள் நகர்த்துகிறார். இந்தச் சமயத்தில் பாஞ்சாலி மாதிரி, ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி, எதிர்த் திசையில் நின்றபடி உருட்டுகிற நபரைக் கண்களால் உருட்டிப் பார்க்கிறாள்.

ஜீப் என்ற ஒன்று வந்து நிற்பதையோ, சினிமா புரோஜக்டர் என்ற ஒரு பெரிய வஸ்து இறக்கப்படுவதையோ 'அடப்போங்கடா' என்பது மாதிரி,—நம்ம ஊர் ஆட்கள் மாதிரியே அலட்சியப்படுத்திய அந்தக் கூட்டத்தை விட்டுவிட்டு, அருகே இருந்த டீக்கடையை நெருங்கினேன். உள்ளே பெஞ்சுகளில் ரொக்கக் காசுக்காரர்கள் கம்பீரமாகவும், ஒருசிலர் நெற்றியில் போட்ட நீண்ட நெடு நாமத்தை டீக்கடைக்காரருக்குக் காட்டியபடியும் இருந்தார்கள். என் உதவி அதிகாரி 'என்ன சார் வேண்டும்?' என்பது மாதிரி என்னைப் பார்த்தார். பிறகு, என் பார்வை, எல்லாப் பருவத்தையும் எடுத்துக் காட்டிய வாடிக்கையாளர்கள் மீது மொய்ப்பதைப் பார்த்துவிட்டு விளக்கினார். இவர்கள், கெளடாக்களாம். லிங்காயத்துக்காரர் மாதிரி சிவனை மட்டும் கும்பிடாமல், எதற்கும் இருக்கட்டும் என்பது போல், எல்லாச் சாமிகளையும் காக்காய்ப் பிடிப்பார்களாம். தலைக்கு பத்து ஏக்கருக்கு மேல், ஆற்றுப் பாசனத்தில் நன்செய் நிலம் வைத்திருந்தாலும் புஞ்சை நிலம் மாதிரி. வாழ்க்கை நடத்துகிறவர்களாம்!

# லட்சியத் தாலி

சு. சமுத்திரம்



கௌடாக்களைப் பார்த்துவிட்டு, விறைப்பாக மயடித்த இளைஞனைப் பார்த்தேன். இருபத்துநான்கு வயதிருக்கலாம். மைசூர் கிளைமேட் அம்முகத்தைச் சந்தன மரமாக ஆக்கியிருந்தது. உடம்பு தடியும் இல்லை. ஒடிசலும் இல்லை.

"என்ன சார் வேணும்? மயா... காப்பியா?..."

என் மனம் ஆனந்தக் கூத்து ஆடியது. "ஏம்பா... நீ தமிழ் ஆளா...?"

"இல்லைப்பா, நீங்க யாரு?..."

"நானு?... நான் தமிழ்நாட்டுக்காரன்... செண்ட்ரல் கவர்ன்மெண்ட்ல பப்ளிசிடி கிழயாதான், ஸ்டேட் ஆபீசர்... பெங்களூர்ல ஆபீஸ் இருக்குது... மெட்ராஸ்ல இருந்து ஒரு மாதத்துக்கு முன்னாடி வந்தேன். பிரமோஷன்லே வந்தேன். இவரு, மைசூர் டிஸ்டிரிக்ட் பப்ளிசிடி ஆபீஸர்... என்னோட இளைய சகா. ஆமாம், கன்னடமா இருந்தும் தமிழ் நல்லாப் பேசறியே..."

"நாங்க கத்துக்குறோம். நீங்கதான் மாட்டீங்க..."

"அப்படியில்லப்பா. நான் அடுத்த தடவை வரும்போது... கன்னடத்துலதான் பேசுவேம்பா...!"

"அப்படின்னு நீங்க வர மாட்டீங்கன்னு அர்த்தம். ஒங்க ஆட்கள் திருந்தவே மாட்டாங்க. எங்க ஆட்கள் அப்பாவிங்க. இளிச்சவாயங்க...!"

"ஒங்க ஆளு — எங்க ஆளுன்னு பேசாதே தம்பி! மதுரை பக்கம் சின்னாளப்பட்டிலயும் கோயமுத்தூர்லயும் கன்னட செட்டிமார்க இருக்காங்க. அவ்வளவு ஏம்பா... ஊட்டியிலே கௌடாக்கள் இருக்காங்கப்பா. நாங்க அவங்கள வித்தியாசமாய் நினைக்கற இல்லேப்பா...!"

"இருக்காங்க. ஆனால் எங்க ஆட்களாய் இல்ல. அவங்களுக்கு கன்னட ஸ்கூல் வைக்காமல்... தமிழனாய் ஆக்கிட்டீங்க. எங்கக் கன்னட மொழிய இல்லாமச் செய்துட்டீங்க. எங்க ஆட்களோடக் கன்னட ரத்தத்தைச் கண்ட வச்சுட்டீங்க."

"நீ சொல்றது சரியா இருக்கலாம்பா. ஆனால் தமிழ்நாட்டுக்காரர்களான எங்களுக்கு அடிமைப்பட்டுத்தான் பழக்கம்பா. ஆதிக்கம் செய்யறது இல்ல. எங்க மாநிலத்துல மொழி பேதம் கிடையாதுப்பா..."

"எங்கப் பக்கம் காவிரித் தண்ணியக் கொண்டு வர்றதுக்காக வருண் கால்வாய் வெட்டப்படுது. இதோட காண்டிராக்டரு தமிழ் ஆளு... இருக்கட்டும். அதுக்காக எங்கேயோ இருந்து தமிழ் ஆட்கள எதுக்காகக் கூப்பிட்டுக் கொண்டு வரணும்? இங்கே இருக்கிற ஆட்கள வச்சால் என்னவாம்?.."

"நீ சொல்றது ரொம்ப சரி. ஆனால் காண்ட்ராக்டர் — அவன் கன்னடத்தானாய் இருந்தாலும் சரி, தமிழகத்தானாய் இருந்தாலும் சரி, அவனுக்கு ஜாதி கிடையாது... மொழி கிடையாது... அவனுக்கு அவனே கிடையாது...."

"நீங்களும் கடைசில ஒரு தமிழன்னு நிரூபிச்சிட்டீங்க. வருண் கால்வாய் எங்களுக்குக் கூலிப் பிரச்னை இல்லை... மொழிப் பிரச்னை.. மானப் பிரச்னை... போ ஸார்... ஒனக்கு ம கிடையாது..."

"என்னப்பா நீ! நான் ஏதோ வருண் கால்வாய்க்கு காண்டிராக்ட் எடுத்துத் தமிழ் ஆட்களைக் கொண்டு குவித்தது மாதிரி பேசுறே?.. நான், ஒரு கன்னட ஹள்ளிய கண்ணாலப் பார்க்கணும்னு எவ்வளவு ஆசையோட வந்தேன் தெரியுமா?"

பாய்லரில் இருந்த ஒரு கையை மைக் மாதிரி வைத்துக் கொண்டு, கன்னடத்தில்



மூன்று நிமிடம் கத்தினான். வீடுகளுக்குள் இருந்த பெண்கள் வெளியே வந்துவிட்டார்கள். தெருவில் நின்ற ஆட்கள் கடைக்குள் வந்தார்கள். எனது உதவி அதிகாரி, கன்னடத்தில் பதிலுக்கு ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். அவர் குரலில் கோபமும், இயலாமையும் மாறி மாறி ஒலித்தன. நான் பயப்படாமலும், பயமுறுத்தாமலும், என் உதவியாளரின் தோளை உலுக்கி, 'என்ன சொல்கிறான்?' என்று ஆங்கிலத்தில் கேட்டேன். அவர் தயங்கித் தயங்கி, மெதுவாக விளக்கினார். ஒருவேளை டீப்பையன் சொன்னதை, எடிட் செய்ய, அவர் அவகாசம் எடுத்துக் கொண்டாரோ என்னவோ! கர்நாடகத்தில், மத்திய அரசிலும், பேங்கிலும் தமிழ் அதிகாரிகள்தான் இருக்கிறார்கள் என்றும், கன்னடக்காரர்கள் வெறும் பியூன்களாக மட்டுமே உள்ளார்கள் என்றும் குமுறினான். இந்த நிலைமை நீடிக்கக் கூடாது என்று சூளுரைத்திருக்கிறான். தமிழர்கள், கன்னட மொழியைப் பேசாமலும், ராஜ்குமார் சினிமாக்களைப் பார்க்காமலும் இருக்கும்வரை, அவர்களை விடக் கூடாது என்று ஆத்திரத்தில் கத்தியிருக்கிறான்.

என் உதவி அதிகாரியைப் பார்த்து 'இந்தப் பையன், நான் முதலில் மனிதன் என்பதை மறந்துவிட்டான். எந்த ஊருக்கும் ஒரு மனிதன் வரும்போது, அவன் முன்னிலையில் விரோதமாகப் பேசுவது அநாகரீகம். இதை நான் சொன்னதாக அவனுக்கும், இங்கே இருப்பவர்களுக்கும் சொல்லுங்கள்'' என்றேன். என் உதவித் தோழர் தயங்கிய போது, 'இது உத்தரவு' என்றேன். அவ்வளவுதான்...

என் உதவி அதிகாரி, ஐந்து நிமிடம் கன்னடத்தில் உரையாற்றினார். அவரது பருத்துப் பெருத்த உடல், பீமன் மல்யுத்தம் செய்வது போல் ஆடியது. என் உதவி அதிகாரி பேசி முடித்ததும், எல்லோருக்கும் சிறிதுநேர நாவடக்கம். பின்னர், டீக்கடைக்குள் இருந்த வயதான கௌடா ஒருவர் டீக்கடைக்காரனிடம் கோபமாகக் கத்தினார்.

---

''எங்க ஆபீசுக்கு புது டைப்ரைட்டரும், புது டைப்பிஸ்ட்டும் வந்திருக்கு...''

''பெயர் என்ன?''

''டைப் ரைட்டர் பெயர் 'ஹால்டா,' டைப்பிஸ்ட் பெயர் 'ஹில்டா!' ''

—விசு.



எங்கள் நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்த நேரு யுவகேந்திர இளைஞர்கள், ஓடிவந்தார்கள். விஷயத்தைக் கேள்விப்பட்டு, வேலையில்லாத் திண்டாட்டத்தில் சிக்கிய தங்களின் நிலையை என்னுள் கண்டதுபோல் சிறிது தயங்கினார்கள். உடனே கல்லூரியில் படிக்கும் அந்த இளைஞர்களில் ஒருவனைப் பார்த்து, 'என்னப்பா செய்யறே?' என்று ஆள் சேர்க்கும் பாவனையில் ஆங்கிலத்தில் கேட்டேன். அவன், 'அடல்ட் எஜுகேஷன் கிளாஸ் எடுக்கிறேன்' என்றான். உடனே நான், ''அடல்ட் எஜுகேஷன் இஸ் இம்பார்ட்டண்ட் பிகாஸ் ஆஃப் சினிமாடிக் அடல்டரி எஜுகேஷன்'' என்று ஜோக் அடித்தேன். பையனுக்கு என்னைப் பிடித்துவிட்டது. செக்ஸ் ஜோக் ஆச்சே!

அதன் எஃபக்ட் என்ன தெரியுமா?

டீக்கடையானை, நேருக்கு நேராய்ப் பார்த்தான். அவன் முகத்தில், தன் ஆள்காட்டி விரல் படும்படி, கோபம் கோபமாய்ப் பேசினான். கூட வந்த இளைஞர்களும் தலைவன் வழியைப் பின்பற்றப் போனார்கள். நான் தடுத்துவிட்டேன். உடனே என் உதவி அதிகாரி, இந்த விவகாரத்தை இப்படித் திசை திருப்பிக் காட்டிய பெருமை தனக்கே என்ற உரிமையில் 'வாங்க சார்... இவன் டீ வேண்டாம். இது நஞ்சு... ஆலகால விஷம்.. நேரு யுவகேந்திரா இளைஞர்கள் அமிர்தம் மாதிரி டீ தருவாங்க' என்று குளிரப் பேசிவிட்டு 'ஆனால் லேட்டாகும்' என்று ஒரு குண்டைப் போட்டார்.

நான், அவன் இழுத்த இழுப்புக்குப் போன போது, கடைக்குள் இருந்த கன்னடப் பெரியவர்கள், ''பன்னி... பன்னி...'' என்று சொன்னபடி, என்னைப் பார்த்துக் கையாட்டினார்கள். எனக்குக் கோபம் வந்தது. உதவியாளரிடம் 'என்னய்யா இது... ஆம் ஐ எ பிக்...?' என்றேன். உடனே அவர், 'பன்னி'ன்னா வாங்கோன்னு அர்த்தம் என்றார். உடனே நான், போங்கோன்னு எப்படிக் கன்னடத்தில் சொல்லணும்னேன். 'ஹோகி' என்றார் உதவியாளர்.

லட்சியவாதி போல், சிறிதும் கவலைப்படாமல் நின்ற டீக்கடை இளைஞனைப் பார்த்து, தமிழிலேயே 'சொல்லுப்பா, நான் 'பன்னியா?' 'ஹோகி'யா? என்றேன். அவனுக்குச் சிரிப்பு வந்தது. என்னை, — இந்த நாற்பத்து நான்கு வயது மனிதனை, இளம் பெண்ணைப் பார்ப்பது போல் பார்த்தபடியே 'பன்னி... பன்னி' என்றான்.

லேட்டாகக் கிடைக்கப் போகும் நேரு யுவகேந்திரா அமிர்தத்தைவிட, உடனே கிடைக்கும் டீக்கடை நஞ்சு நல்லது என்று கணக்கிட்டு, நான் உள்ளே போனேன். இளைஞர்கள் எழுந்து, இடம் கொடுத்தார்கள். இரண்டு பெரியவர்கள், தத்தம் தொடைகளை நகர்த்தி, இடைவெளி விட்டார்கள். நான், இடையில் உட்கார்ந்தேன். வெளியே நின்ற இரண்டு பேர் டீக்கடையானை உரக்க ஏதோ கேட்டார்கள். அவனோ, அவர்களைப் பொருட்படுத்தாமல், என்னிடம் எவர்சில்

# வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர். பற்சிதைவை எதிர்த்திடுவீர்.



# கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர் !

தவறாமல் கோல்கேட் உபயோகிப்பதால்,
உங்கள் குடும்பத்தினரின் பற்களுக்கு ஆரோக்கியம், வலிமை, புத்துணர்ச்சி
தரும் தூய சுவாசம் கிடைக்கிறது.
இதுவே கோல்கேட்டின் பாதுகாப்பு வளையம்.

நீங்கள் பல் துலக்கும் ஒவ்வொரு முறையும்
கோல்கேட்டின் நம்பகமான ஃபார்முலா
செயல்படுவது எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே
சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும்,
பற்சிதைவையும் உண்டாக்கும்
பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும்
நுரை ஆழ ஊடுருவிச் சென்று,
துர்நாற்றத்தை ஏற்படுத்தும் உணவுத்
துணுக்குகளையும் சிதைவு ஏற்படுத்தும்
பாக்டீரியாக்களையும் அகற்றுகிறது.



முறையாக கோல்கேட் கொண்டு பல்
துலக்குவதால் புத்துணர்ச்சி தரும்
தூய சுவாசமும், வலிமை மிகுந்த
ஆரோக்கியமும் தருகிறது.

ஒவ்வொரு முறையும் சாப்பிட்ட உடன்,
உங்கள் குடும்பத்தினர் தவறாமல் கோல்கேட்
கொண்டு பல் துலக்கட்டும்.
வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்.
கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர்.




கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்
பெப்பர்மெண்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது !

# "ஊஹூம்! ஊசி போட்டால்தான் குணமாகும்!"



நினைவுகள் நிறைந்திடும் அழியாத
கோலமே வாழ்க்கையெனும் அற்புதம்.
பாசம், நேசம், உல்லாசம், பெருமிதம் போன்ற
நவரசம் ததும்பும் தருணங்கள் எங்கும்,
எப்போதும் நேரலாம்.

அத்தருணமே அவற்றைப்
புகைப்படமாக எடுத்திடுவீர்! குறிப்பாக,
பிளாக் & ஒயிட் பிலிமில் எடுத்தால்
அவை காலமெல்லாம் மங்காது.

புகைப்படங்கள்.

என்றென்றும் வாழும் பசுமையான
நினைவுச் சோலைகள்.



**மனம் அள்ளும்
நினைவுகளை
சிறை கொள்ளும்!**




**இந்து ரோல் பிலிம்
மற்றும் ப்ரோமைடுகள்**

Sista's - HPF.290.84 TM

வர் டம்ளரை நீட்டினான். பிறகு மன்னிப்புக் குரலில், தமிழிலேயே பேசினான்.

"நான் கூடத் தமிழை... இங்கே வருண் கால்வாய் ஆட்களோட பழகித்தான் கத்துக் கிட்டேன். இதே மாதிரி உங்க ஆட்களும்... சரி... விடுங்க ஸார். கொஞ்சம் எழுந்திரிங்க ஸார். உங்க பாண்டு வெள்ளை பாண்டு... அழுக்காயிடும். துண்டை விரிக்கிறேன். எழுந்திரிங்கோ..."

நான் எழுந்தேன். அவன் துண்டுவிரித்தான். மீண்டும் அமர்ந்தேன்.

இதற்குள் வெளியே நின்ற இருவரும் 'ஏனப்பா...' என்று கேட்டபடியே, டீக் கடைக்காரனிடம் முறைப்பாகப் பேசினார்கள். இடுப்புக்கு மேலே பனை மரத்திலே பாக்கு மர ஓலை பட்டதுபோல் மேல் துண்டோடு நின்ற அறுபது வயது மனிதரை, லுங்கியும், பனியனும் போட்ட இளைஞன் பிடித்திழுத்து வெளிநடப்பு செய்யப் போனான். கூட்டத்தைப் பார்த்து, கோபமாக முறையிட்டான். டீக்கடைக்காரன், அவர்களைப் பொருட்படுத்தாமலே, பாய்லரின் வலதுபக்கம், அழுக்கு மூலையில் தனியாக இருந்த இரண்டு டப்பா டம்ளர்களை எடுத்தான். அவற்றை டீயால் நிரப்பி, கோபமாக ஏதோ பேசியபடியே வெளியே நீட்டினான். அவர்கள் வாங்கிக் கொண்டார்கள். அவன் நீட்டிய இரண்டு ரொட்டிகளையும் கடித்துக் கொண்டார்கள்.

நான், அவர்களைப்பார்த்துவிட்டு, உள்ளே பார்த்தேன். இடம் இருந்தது. வெளியே தூசியும், புழுதியும் அடித்துக் கொண்டிருந்தது. டீக்கடையானைப் பார்த்துக் கேட்டேன். சுற்றுப்புற சுகாதாரம் தனிமனிதர் சுகாதாரம் போன்றவைகளைப் போதிக்க வேண்டிய 'அஃபிஷியல் கடமை' நினைவுக்கு வந்தது.

"அவங்களை, உள்ளே வந்து உட்கார்ந்து நிதானமாய்ச் சாப்பிடச் சொல்லுப்பா... தெருவுல உள்ள கிருமி, டீயில பட்டு, வாய் வழியாய் வயித்துக்குள்ளே போகும் பாரு..."

காப்பிக் கறை திட்டுத் திட்டாகக் காட்டிய சட்டையோடு நின்ற டீக்கடை இளைஞன், திட்டவட்டமாகச் சொன்னான். "அவங்க உள்ளே வரமாட்டாங்க ஸார்... அவங்க பிரதிஸ்ட ஜாதி."

"அப்படின்னா..."

"ஹரிஜனங்க... ஸார்..."

"ஓஹோ... எங்க ஊர்க் கதைதான் ஒங்க ஊர்லயுமா?..."

"ஆமாம் ஸார்... காசு வேண்டாம் ஸார்... ஒங்க கிட்டே வாங்க மாட்டேன் ஸார்..."

"தெரியாமத்தான் கேட்கேன். இவ்வளவு நேரமும் கன்னடத்தான்... கன்னடத்தான்னு பேசின... இப்போ கன்னடத்தான் இல்லாத — இன்னும் சொல்லப் போனால்... அவனுக்கு விரோதி மாதிரி தோணற தமிழ் ஆளான என்னை... உள்ளே... பெஞ்சுமேல ஒக்கார வச்சே... அப்புறம் துண்டு போட்டு உட்கார வச்சே. அதேசமயம் ஒன் ஊர்க் காரனை, நீ பேசற அதே மொழியை — ஒன்னை மாதிரியே பேசற ரெண்டு கன்னடத் தான்களை வெளியே நிறுத்தி வைக்கிறே... தமிழ்க்காரனை எனக்கு எவர்சில்வர் டம்ளர். இந்தக் கன்னடத்தான்களுக்கு டப்பா கிளாஸ்... ஏனப்பா இது?..."

என் கேள்வியைச் சற்றும் எதிர்பாராத அந்தப் பையன், என்னை மருண்டு பார்த்தான். தமிழன் ஒருவனிடம் தலைகுனிய நேரிட்டதற்கு, இவர்கள்தான் காரணம் என்பது மாதிரி வெளியே நின்ற அந்த அப்பன் — பிள்ளையைக் கோபமாகப் பார்த்தான். நான் விடவில்லை.

"ஏனப்பா... இது... என்ன கன்னட நியாயம்பா... நான் சொன்னதைக் கடைக்குள்ளே இருக்கிறவுங்க கிட்டே, கன்னடத்திலே சொல்லுப்பா...அட சொல்லுப்பா!"

டீக்காரன், சொல்வதற்கு முன்பே, உள்ளேயிருந்தவர்கள், அவனிடம், கண்ணால் என்னைக் காட்டி, காதையும் கொடுத்தார்கள். அவன், நான் சொன்னதை, கன்னடத்தில் சொன்னான். சொல்லி முடித்ததும், கௌடாப் பெரியவர்கள் சிரிப்பாய்ச் சிரித்தார்கள். என்னிடமே நேரடியாக, 'பிரதிஸ்ட ஜாதி... பிரதிஸ்ட ஜாதி' என்று சொல்லிச் சொல்லிச் சிரித்தார்கள்.

நான், சிரித்தவர்களைப் பார்க்காமலே, முன்பு என்னைச் சீண்டியவனைப் பார்த்தேன். இதற்குள் டீயையும், பன்னையும் உள்ளே தள்ளிவிட்டு, வெளியே நின்ற இருவரும், கிளாஸ்களைக் கழுவுவதற்காக, டீக்காரன் ஒரு ஈயப் போனியை நீட்டினான். அவன் நீட்டிய கை, ஈயப் போனியை விட்டு விட்டு, திரும்பியதும், நான் இடக்காகக் கேட்டேன்.

"சொல்லுப்பா... தமிழன் உள்ளே... கன்னடத்தான் வெளியே... ஏனப்பா...!"

"ஒண்ணு நான் ஒத்துக்கணும் ஸார்... ஒங்களுக்கு, அதாவது ஒங்க ஆட்களுக்குப் பேசுற சாதுரியம் ஜாஸ்தி ஸார்...!"

"இந்தா பாரு தம்பி... இனிமேல் ஒங்க ஆட்கள் எங்க ஆட்கள்னு பிரிச்சுப் பேசாதே... ஏன்னா, நாம ஒண்ணுப்பா...! தமிழனும், கன்னடத்தானும் அண்ணன் தம்பிப்பா... நாங்களும் 'பிரதிஸ்ட ஜாதி'யைத் தனியாய் வெச்சிருக்கோம். தனி கிளாஸ்ல தான் டீ கொடுக்கோம்... அதே சமயம் ஒன்னை மாதிரி கன்னடத்தானை உள்ளே சேர்ப்போம்... சொந்த ஊர் ஆட்களை, சொந்த மொழி ஆட்களைத் தள்ளி வைக்கிற இந்த ஒரு ஒற்றுமையே போதாதா நமக்கு?... இனிமேல் பிரிச்சிப் பிரிச்சிப் பேசாதே. நான் இப்போ சொன்னதை... ஒங்க — மன்னிக்கணும் — நம்ம ஆட்கள் கிட்டே கன்னடத்திலே சொல்லுப்பா...

டீக்காரன், தன் லட்சியத் தாலி அறுபட்டவன் போல், பட்டும், படாமலும் தலை குனிந்த போது, என் தமிழ்ப் பேச்சைப் புரிந்து கொண்டவன் போல், வெளியே அப்பனைப் போல் கிளாஸைக் கழுவிக் கொண்டிருந்த அந்த 'பிரதிஸ்ட ஜாதி' இளைஞன், கோபப்பட்டவன் போல் தலையைத் தூக்கினான்.

# மோகினி திருக்கோலம்

ஸ்ரீவேணுகோபாலன்



## 22
## மற்றொரு உள்ளம் திறக்கிறது

வர்மனின் கண்கள் இன்னும் சஞ்சலித்தன. இது செங்ககாவா? வேறு பெண்ணா?

மலங்கியவாறு விழித்தான். அந்தப் பெண் ஒரு காலை நந்தவனம் போல இருந்தாள். முகத்தில் மென்மை, பசுமை, புதுமை, எல்லாம் தவழ்ந்தன. கண்கள் இரண்டும் ஒரு மலர் ஜோடியாக அவனுக்குத் தோன்றியது

"நான்தான், வீரரே! சிந்து!" என்றாள் அவள். புன்னகை வந்தாலும் சோகம் ஒரு ரேகையாகக் கண் ஓரம் தத்தளித்தது.

"சிந்து?" என்றான் ஆச்சரியமுடன்.

"ஆமாம்!"

நினைவுகள் கொஞ்சம் கொஞ்சமாக ஒளியாகி வந்தன. அவன் சண்டை போட்டது. காயம் பட்டது...

சுற்றிலும் வியப்புடன் பார்த்தான்.

"இன்னும் காவேரிக் கரையிலேயே இருக்கிறோமா?"

"ஆமாம்."

"வேன்லான் ராஜ் இருக்கிறாரா?"

"இல்லை அவர் புதுச்சேரி போயிருக்கிறார். உங்கள் உடம்பு சரியானதும் அழைத்து வரச் சொன்னார்."

உள்ளே ஊழியர் ஒருவர் ஒரு ஏனத்தில் சூடாகக் கஞ்சி கொணர்ந்து கொடுத்தார்.

சிந்து அதை வாங்கி ஒரு பாத்திரத்தில் ஆற்றி அவன் முன்னால் வைத்தாள்.

"அப்புறம் செங்ககா விஷயம் தெரிந்ததா?"

பாத்திரத்தைத் தூக்கியவாறு கேட்டான்.

"ஏன் தெரியாமல்?"

"ஏன் என்ன ஆயிற்று?" பதற்றமுடன் கேட்டான் அவன்.

"ஏன் வீரரே! உங்கள் உடம்பு சரியாகி விட்டதா என்று கவனிக்கவில்லை, அதற்குள் செங்ககாவா?"

அங்கலாய்ப்புடன் கேட்டாள் அவள்.

ஒரு விநாடி சுரீர் என்று அது தைத்தது.

"இல்லை அம்மணி! அவளுக்காகத்தானே இவ்வளவு பாடுபடுகிறோம்" என்றான் சமாளித்தவாறு.

சிந்து சிறிது நேரம் பேசவில்லை.

ஒரு சிப்பந்தியை அழைத்துத் தண்ணீர் கொண்டு வைக்கச் சொன்னாள்.

"அவளைப் புதுச்சேரிக்குக் கொண்டு போய் விட்டார்கள்!" என்றாள் மெதுவாக.

டக்கென்று பாத்திரத்தைக் கீழே வைத்தான் வர்மன்.

"அங்கே எதற்கு?"



"பிரெஞ்சுக்காரர் பாதுகாப்பில் இருப்பதற்காக!"

"இது என்ன வம்பு?"

"வம்பு என்ன இருக்கிறது? இங்கே படைவீட்டில் பாதுகாப்பு இல்லை என்று தெரிந்தது. பிரெஞ்சுக்காரர்தான் அடுத்தபடி புகல்! அங்கே அவளை அனுப்பியாகிவிட்டது."

"உங்களுக்கு யார் சொன்னார்கள்?"

"வேன்ஸான் சொன்னார். அவர் புதுச்சேரி போய்விட்டார். உங்கள் உடம்பு குணமானதும் அழைத்துவரச் சொன்னார்."

"என் உடம்பு குணமாகவில்லையா?"

"நல்ல குளிர் ஜுரமும் வந்திருந்தது. ஒரு வாரம் நினைவில்லாமல் இருந்தீர்கள்?"

"ஒரு வாரமா?"

"ஆமாம். வேன்ஸான் வைத்தியரை அனுப்பியிருக்கிறார்."

அவன் பேசவில்லை.

"நானும் இங்கே இருக்கிறேன்."

மெலிதாக உரைத்தாள் அவள்.

எழ முயன்றான் அவன்.

அப்போதுதான் உடம்பில் பலவீனம் தெரிந்தது. அதுமட்டுமல்ல! உடம்பு பூராவும் பட்டிருந்த காயங்கள் அங்கங்கு இன்னும் ஊமை வலியில் இருந்தன.

அடேயப்பா! அவன் வீரம் எல்லாம் எங்கே? கேவலம் ஒரு ஜுரம் கீழே அவனைப் போட்டுப் புரட்டிவிட்டதே!

"நான் எழுந்திருக்க எத்தனை நாளாகும்? வைத்தியர் என்ன சொல்கிறார்?"

"இன்னும் ஒரு வாரம் ஆகும்!"

"அவ்வளவு நாளா?"

அவ்வளவு நாட்களிலும் சிந்து அவனுக்குப் பணிவிடை செய்வதைப் பார்த்தான்.

அவள் ஒரு அலுங்காத தீபம் போல இருந்தாள். மௌனம் அவள் மொழியாக இருந்தது. கண்கள்தான் விசாரித்தன, பேசின. ஆனால் அரைக்கணம் மேல் அவள் அவன் முன் இருப்பதில்லை. மின்னல் இழுப்பாக வெளியே மறைந்துவிடுவாள்.

சமயங்களில் அவனுக்கு அவளைப் பார்க்க வேண்டும் போலத் தோன்றும். அது ஒரு தாபமாக வேலை செய்யும். மெள்ள எழுந்திருப்பான். கூடாரத்தின் வாசலுக்கு வந்து திரையை விலக்கிப் பார்ப்பான். காவேரி வரை நிர்மலமாக இருக்கும். ஒருவித வண்டின் 'ரமரம' இரைச்சல்தான் மெலிதாகக் கேட்கும்.

எங்கே சிந்து? நாலாபுறமும் பார்ப்பான். தென்னையும் மாவும் கணக்கற்ற பசுமைச்செடிகளும் எங்கும் முளைத்திருக்கும். அவற்றின் அத்தனை ஊடேயும் வெறுமைதான் தெரியும்.

மனத்தில் அப்போது சூன்யமாக ஒரு வெறுமை நிறையும். மனத்தை அது பிழிவது போல இருக்கும். இயற்கையோடு அவனும் சோகிப்பது போல் நினைப்பான்.

* * * * *

அன்று அந்தி நேரத்தில் மெல்லிய கீற்றுப் போல ஒரு பாடல் இழை மிதந்து வந்தது.

மெள்ள நடந்து கூடார வாயிலுக்கு வந்தான்.

அந்தியின் அடிவானம் குங்குமமாகச் சிவந்து கிடந்தது.

அத்தனை இயற்கையும் ஒரு மௌன நிழலாக மாறிக் கொண்டிருந்தன.

மெல்லிய காற்று காவேரியின் மணத்தோடு வீசியது.

கீழே அவன் முன்னால் ஒரு ஒற்றை அடித்தடம் நெளிந்து நாணல் புதர் வழியே ஓடியது.

மெதுவாக நடந்தான்.

சிறு இழைகளாகப் பாடல் தெளிவாகக் கேட்கத் தொடங்கியது.

'ஆனேன் பரவசமாய்
ஆவி மெழுகது போல்
தானே மயங்கித் தயங்கினேன்
கன்னலே வில்லாய், களிவண்டே நாணாக
பன்னு மலர் ஐந்தும் பாணமாய்
முன்னமலர்
மாரி எனவே, பெரிய
வானகம் எல்லாம் நெறிய
வேரி மிகவே சொரிய
வேகமுடன் நான்
சோர்ந்தேன்
கலை சோர்ந்தேன்
துய்ய வளை சோர்ந்தேன்

சேர்ந்தேன் மலரணையே சேர்ந்தேனே.''

விட்டு விட்டு அடிகள் மிதந்து வந்தன திரும்பத் திரும்ப ஒரே அடிகள் வர, அவற்றின் சோகம் அதனுடன் தொற்றி வருவது போல் இருக்க,

புல் தரிசையின் மேடு ஏறியதும், பரந்த நதி சற்றே கருநீலப் பரப்பாகத் தெரிய,

மணல் பரப்பெல்லாம் நிலா முற்றம் போல் மெல்லிய வெண்மை விகசித்தது.

அங்கே நீர்விளிம்புப் பாறையில் கால்களைக் கைகோத்துச் சிந்து உட்கார்ந்திருந்தது தெரிந்தது.

மனத்தில் அந்தக் காட்சி ஏன் சொல்ல இயலாத் துயரை ஏற்படுத்தியது?

ஏதோ அபலை பூமியில் நடுவாந்தரத்தில் அமர்ந்து புலம்புவது போன்று காட்சி தந்ததாலா?

அல்லது பாடும் பாடலின் சோக ரேகைகள் எல்லா இடமும் பரவி அவன் மனத்தை அழுத்தியதாலா?

அருகில் போய் நின்றான்.

இழை அறுந்தது போல் அவள் திடீரென்று பாடலை நிறுத்தினாள்.

பாறையின் விளிம்புகளில் 'களுக், களுக்' என்று நீர் சுழலிடும் தொனிகள் மென்மைக் குழந்தைச் சிரிப்புக்களாக மேலே கிளம்பின.

நிசப்த விழிகளால் அவனைப் பார்த்தாள்.

''ஓ'' என்றாள். ''இவ்வளவு தூரம் நடந்து...''

''இவ்வளவு இனிதாகப் பாடுவீர்கள் என்பது தெரியாது!'' என்றான் அவன். ''அதுதான் என்னை இழுத்து வந்தது!''

அவள் தலை குனிந்தாள்.

பாறை மீது நுண்ணிய விரலால் கோடுகள் இழுத்தாள்

''பாடுவேன், ஆடுவேன்! பாடல் கட்டுவேன், சித்திரம் வரைவேன்...''

''அப்படியா?'' ஆச்சரியமாகக் கேட்டான், அவன்.

''ஆனால் இப்போது அத்தனையும் தேவை இல்லை! சுருட்டி வைத்துவிட்டேன்! நாடு நன்றாக இல்லாத போது பாட்டு எதற்கு?''

அவன் பேசவில்லை!

''இது என் தீர்மானம் மட்டுமில்லை! எங்கள் ரகசிய உடன்படிக்கைக்குழு இருக்கிறதே! அதன் தீர்மானம் கூட! தெய்வப் பாடலைத்தவிர வேறு எதையும் பாடுவதில்லை!

இப்போது பாடியது கூட ஒரு தெய்வத்தின் மீது சாதாரணப் பெண் தூதுவிட்டுப் பாடியதுதான்!''

''இத்தனை சோகமா! கண்ணீர் வந்துவிட்டதே!''

''ஓ! அது என் குரல்வாசியாக இருக்கலாம்!''

''உங்களுக்கு ஏன் சோகம், சிந்து?''

''இல்லையா?'' என்று முழுவதுமாகத் திரும்பி அவனைப் பார்த்தாள். ''எங்கள் குலங்கள் மதுரையை ஏற்க வர வேண்டாமா? உங்கள் குலங்கள் நிம்மதியாகப் பாளையங்களை ஏற்க வர வேண்டாமா?''

''வருமா?''

''வரும்! உங்களைப் போன்றவர் நம்பிக்கை வைத்தால்...''

''ஏன்! என் நம்பிக்கைக்குக் குறைவு இல்லையே?''

''நம்பிக்கை இருக்குமானால் சந்தாசாகிப்பைக் காப்பாற்ற முனைந்திருப்பீரா?''

திடுக்கிட்டான் அவன். ''என்ன சொல்கிறீர்கள்?''

''ஆமாம்! அவர் படையே அவரைத் தாக்கிக் கொல்ல முயலும் போது நீங்கள் சந்தாசாகிப்பைக் காப்பாற்றலாமா?''

''ஆபத்தின் போது...?''

''ஆபத்தின் போது எதிரியைக் காப்பாற்றலாமா? அவன் நமது பரம விரோதி! ராணி மீனாட்சியை நயவஞ்சகமாகக் கொன்று எங்கள் வம்சத்தை ராஜ்யம் புரிய விடாமல் தடுத்தவரை, நீங்கள் பாதுகாக்க வேண்டுமா?''

சற்றே அழுத்தமுடன் கூறினாள். அதில் நிறைய சூடு ஏறி அவனைத் தகித்தது.

புதிதாக ஒரு வார்த்தை உணர்பவன் போலச் சிறிது யோசித்தான்.

''எங்கள் குழுவுக்கு உதவுவதாக சத்தியம் எடுத்துக் கொண்டீரே, அது என்னவாயிற்று?''

அவன் தத்தளித்தான்.

''நான் செய்தது செஞ்சுகாவுக்காகத் தானே!''

''உங்களுக்கு ஏன் அவ்வளவு அக்கறை! ஒருநாட்டுக்காக ஒருதனி மனிதரையோ மனுஷியையோ, தியாகம் பண்ணலாம் என்றேமே!''

அந்த வாதம் அவன்மேல் சாட்டை போலப் பட்டது.

''உண்மை! ஆனால் செஞ்சுகாவைப் போல் ஒரு இளவரசியை...''

''அதனால் என்ன? கார்வேட் ராஜாவே அவளைத் தியாகம் செய்ய முனைந்த போது...''



''காதுக்குள்ளேருந்து என்னமோ முளைக்கிறதோன்னு பயந்துடாதே.... முதல் நாளே பெண்டாட்டி பேச்சை நான் கேட்கக் கூடாது என்று அம்மா பஞ்சு திணித்துவிட்டாள், அவ்வளவு தான்...!''



''என் நெஞ்சு படபடத்து இதயம் துடி துடித்து ரத்தம் கொதி கொதித்து மண்டையே வெடித்து மயக்கம் வரும் போலிருக்கு...''

''அடடா! என்ன சார் திமர்னு...?''

''பிளாட்பாரம் டிக்கெட் கேட்கிறு யேப்பா!''

அவனுக்கு மனசும் அரித்தது. செங்குகா மீது ஏற்பட்டிருந்த அளவற்ற அன்புதான் அவனை அப்படிச் செய்யச் சொல்லியிருந்தது. அது கூடச் சரியா?

''நானும் தான் இளவரசி! வீரரே!'' நிமிர்ந்து சொன்னுள் அவள்.

''நீங்களா!''

''ஆமாம்! எங்கள் நாயக்கர் வம்சம் ஆண்டால் நானும் இளவரசிதான்!''

வர்மன் மனத்தில் அவனை அறியாமல் ஒரு புளகம் ஏற்பட்டது.

திடீரென்று அவள் மீது மதிப்பும், மரியாதையும் கூடியது.

''தேவதாசி என்றீர்களே!''

''சந்தர்ப்பம் அப்படி வந்ததால்...''

வர்மன் அவளைப் பார்த்தான். முகத்திலும் கண்ணிலும் அந்த அரச குடும்பத்தின் ஒய்யாரம் இருந்தது. கம்பீரம் இருந்தது. தவிர அவளிடம் ஏதோ தெய்வீகமும் இருந்தது. முழுத் தாமரையும் மலர்ந்தது போல ஒரு பரவசமான பூரணம் அவளிடம் இருந்தது.

இவளைப் பார்த்தால் செங்குகா வெறும் மொட்டு.

''வீரரே! ஒரு ஜமீனின் துயரை நீங்கள் நீக்க முயன்றது சரி! ஒரு நாட்டின் துயரை நீக்க முனைய வேண்டாமா? நாட்டின் துயர் நீங்கினுல் ஜமீன் துயர் தானுக நீங்குமே!''

சுருக்கென்று அந்த வார்த்தைகளும் அவனைத் தைத்தன.

அந்தக் கணத்தில் சிந்துவே நாட்டுத் துயரின் சின்னமாகத் தோன்றினுள். இவளது துயர் துடைப்பது அல்லவா முதல் வேலை! இவளாகத் தனியாக நின்று எத்தனை காரியங்களைச் செய்து வருகிறுள்! இவளைஅல்லவா அவன் முதலில் கவனித்திருக்கவேண்டும்.

''இளவரசி! தப்பிதம் செய்து விட்டேனு?'' என்று தழுதழுக்கக் கேட்டான் அவன்.

''இல்லை வீரரே! ஒரு சந்தர்ப்பத்தை இழந்து விட்டீர்! சந்தா சாஹிப் கதை முடிந்திருந்தால் இதற்குள் நமக்கு எல்லோருக்குமே நல்ல காலம் பிறந்திருக்கும்...''

''உண்மை! இளவரசி! என்னை மன்னியுங்கள்.''

''பரவாயில்லை, வீரரே! ஒருகணம் சிந்தியுங்கள். இந்த இருவாரமும் ஒரு கூடாரத்தில் தங்கி உங்கள் நோயும், காயமும் ஆறுவதற்கு உதவிகள் செய்தேனே எதற்கு?''

''என் மேல் இரக்கம் வைத்திருக்கிறீர்கள்!''

''இரக்கம் மட்டுமல்ல! தங்கள் வீரத்தை உணர்ந்தவள் நான். லட்சத்தில் ஒருவர்தான் அப்படி ஒரு வீரத் தேர்ச்சியுடன் கிடைப்பார்கள். உங்களால் எங்கள் நாடு விடுதலை அடையும் என்று நம்பினேன். இப்போதும் நம்புகிறேன்.''

''என்னுலா?''

''ஆமாம் வீரரே! உங்கள் வீரம் மகத்தானது. அதை எங்கள் சொத்தாக எடுத்துக் கொள்ள நினைக்கிறேன்.''

''நீங்களா நினைக்கிறீர்கள்!''

''ஆமாம், மனம் விட்டுச் சொல்கிறேன். எங்கள் வாழ்க்கை எல்லாம் கூட உங்களைச் சார்ந்திருக்கும் என்று நினைக்கிறேன். உங்கள் மீது பூரண நம்பிக்கை வைத்து ஆசைக்கு மேல் ஆசை வளர்த்து வந்த எனக்கு இல்லை எங்களுக்குக் கைம்மாறு செய்வது இப்படியா? வீரத்தையும் சாகசத்தையும் வீண் வழிகளில் செலவழிக்கிறீர்களே!''

அவன் உணர்ச்சிகள் அலைமோதி எழுந்தன. கண்களில் ஈரம் இலங்க, ''இளவரசி! இப்போது சொல்லுங்கள் நான் என்ன செய்ய வேண்டும் என்று!'' என்றுன் ஆத்திரத்துடன்.

''முதலில் வேண்டுவது சந்தாசாகிப்பின் பலி என்றேனே!''

''இப்போதே தயார் இளவரசி! நான் என்ன செய்ய வேண்டும்?''

''அப்பா!'' என்று மூச்சு விட்டாள் அவள். அவளுக்கு நிம்மதி வந்தது போலிருந்தது. கண்களில் திவலைகள் ததும்பின. ''பரவாயில்லை! சற்று முன்தான் சோகத்தில் இழிந்தேன்! பாடல் பாடாதவன் சுற்றிவர நடப்பதை எல்லாம் பார்த்து மனமுடைந்து என் சொந்த சோகத்தை நினைத்துப் பாடினேன். இப்போது கடவுளே எனக்கு மாற்றம் தந்து விட்டார்! எழுங்கள் வீரரே!''

இருவரும் எழுந்தார்கள்.

ஒரு வாரத்தில் வேன்ஸான் ராஜ் வர்மனை தூப்ளே மனைவியிடம் கொண்டு நிறுத்தியிருந்தான்.

வர்மனுக்கு எல்லாமே வியப்பாக இருந்தது. அந்த விஸ்தார அறையின் அமைப்பு, உள்ளே இருந்த ஆசனங்கள், ஜோடனைகள் யாவுமே விசித்திரமாகத் தோன்றின.

''இந்த இளைஞன் நமக்கு உதவி புரிவானு?'' என்று கேட்டாள் மதாம் தூப்ளே.

(தொடரும்)

# கோபத்துக்குப் பதில் பொறுமை



**கைப்பிடித்தவர்**

என் மாமன் மகன் ஒருமுறை என் கையைப் பிடித்து இழுத்துவிட்டார். முகம் ஜிவுஜிவுக்க கஷ்டப்பட்டுக் கோபத்தை அடக்கிக் கொண்டு, "தயவு செய்து என் கையை விடுங்கள்" என்று அமைதியாக ஆனால் உறுதியாகக் கூறினேன். பிடி தளர்ந்தது. என்னை ஆச்சர்யத்தோடு அவர் பார்த்த பார்வையில் என் மதிப்பு உயர்ந்தது. அவர் தான் இன்று என் அன்புக் கணவர். அன்று நான் திட்டி... ஏசியிருந்தால்...?

கே. இந்திராணி துரை, கோத்தகிரி.

**துப்பாக்கி முனையில்...**

இலங்கையில் நாங்கள் இருந்தபோது ஒரு நாள் இரவு தடதடவென்று நாலு பேர் கதவைத் தட்டி உள்ளே நுழைந்து விடுதலைப்புலிகளுக்கு நாங்கள் அடைக்கலம் தந்திருப்பதாய்க் குற்றம் சாட்டித் துப்பாக்கிக் காட்டிப் பயமுறுத்தினர். நான் அமைதியாக அவர்களை அமரச் செய்து மனைவியை உ த ய ா ரிக்கச் சொல்லி அளித்து உபசரித்தேன். என் பொறுமை காரணமாக அவர்கள் உ சாப்பிட்டதும் வீட்டைக் கூடச் சோதிக்காமல் திரும்பி விட்டனர். என் நண்பர்களை மட்டுமின்றி என் உடைமைகளையும் காப்பாற்றிக் கொண்டு விட்டேன்!

ஜி. சம்பத்குமார், வில்லிங்டன்.

**பெல்ட் அடி!**

எனக்குத் திருமணமான பிறகுதான் அவருக்கு ஏற்கெனவே ஒரு பெண்ணின் தொடர்பு இருப்பது தெரிய வந்தது. அவள் வீட்டுக்கு அருகேயே எங்கள் தனிக் குடித்தனம் அமைந்தது அவருக்கு வசதியாய்ப் போயிற்று. வீட்டுக்கே வருவதில்லை... தப்பித் தவறி வந்தாலோ பெல்ட்டினால் அடி! பல்லைக் கடித்துக் கொண்டு கடவுளைப் பிரார்த்தித்துப் பொறுமை காத்தேன். நாளடைவில் அவருக்கே இரக்கம் பிறந்தது. வீடு மாறினோம். இன்று இரு குழந்தைகளுடன் சந்தோஷமாய் இருக்கிறோம்.

ஆ. சாந்தி ஆனந்தராவ், சென்னை.






**பிறர் கடிதம் படிப்பதா?**

"உனக்கு வந்த கடிதத்தைப் பிரித்துப்படிக்கிறான் பார்; ஓங்கி ஒரு அறை வை!" என்றான் சிநேகிதி நான் அலுவலகத்தில் நுழைந்ததும். கடிதத்தைப் படித்தவள் அதை நீட்டியபோது சிரித்தபடியே, "நீயே என்ன விஷயம் என்று சொல்லிவிடேன், எனக்கு நேரம் மிச்சம்!" என்றேன். பதில் பேசாமல் க டி த த் தை வைத்துவிட்டுப் போன அவள் அடுத்த

வாரம் திடீரென்று காலமாகிவிட்டாள். எனக்கு ஒரு சின்ன ஆறுதல்: 'நல்லவேளை அன்று கோபித்துத் திட்டாமல் இருந்தோமே' என்று.

—ஜி. பத்மாவதி, சென்னை—45.

**திட்டித் தீர்த்ததும் குட்டிச் சாத்தானும்**

காரியாலயக் கடிதம் ஒன்று காணவில்லை என்று என்னையும் குழந்தைகளையும் ஏக மாகத் திட்டித் தீர்த்து விட்டு ஆபிஸுக்குப் போனார் என் கணவர். நான் பொறுமை யோடு பதில் பேசாதிருந்தேன். ஆபிஸில் அவர் மேஜையிலேயே அந்தக் கடிதம் அகப் பட்டதும் சாயங்காலம் வீடு திரும்பும்போது கையில் 'குட்டிச் சாத்தான்' படத்துக்கான டிக்கெட்டுகளுடன் வந்தார்.

ராதிகா, திருச்சி

**''அல்லாஹ்! நான் உடைக்கலே''**

வறுமை காரணமாக உறவினர் வீட்டில் தங்கிப் படித்துக் கொண்டிருந்தேன். ஒரு நாள் விலை உயர்ந்த பீங்கான் பாத்திரங்களை உடைத்துவிட்ட அவர்கள் பெண் பயந்து போய் என்மீது பழிசுமத்திவிட்டாள். ஏகப் பட்ட ''அர்ச்சனை'' எனக்கு! மௌனமாக ஏற்றுக் கொண்டு வேதனையுடன் படுக்கப்





போனேன். தூக்கத்திலேயே ''அல்லாஹ்! நான் உடைக்கவில்லே'' என்று பலமுறை உரக்கச் சொல்லியிருக்கிறேன் போலும். உண்மையை உணர்ந்தவர்கள் மறுநாள் காலை என்னைத் தட்டிக் கொடுத்து சமாதானப்படுத் தியதுடன் நிறையச் செலவு செய்து பள்ளி யில் பலரும் செல்லவிருந்த சுற்றுலாவுக்கு என்னையும் அனுப்பி வைத்தார்கள்.

ஏ. ஜாஹிதா அஜிஸ், பி. த. பந்தல்.

**பால்காரருக்குக் காப்பி!**

எங்கள் வீட்டுக்குப் பால் கொண்டு வரு பவர் தினம் தாமதமாக வருவார். ஏன் இப் படி என்று கடிந்து கொண்டால் மறுநாள் மேலும் பத்து நிமிஷம் தாமதமாக வருவார்! ஒருநாள் விருந்தினர் வந்துவிட டிப்போ வுக்குப் போய்ப் பால் வாங்கி வந்து காப்பி தயாரித்ததுடன் பால்காரர் வந்ததும் அவ ருக்கும் கொடுத்தேன். மறுநாள் முதல் தாம தமே கிடையாது!

ஆர். அபிராமி, சிவகாசி.

**மடியில் விழுந்த ஐஸ்கிரீம்**

என் தோழியை என் பிறந்த நாள் விழா வுக்கு அழைத்திருந்தேன். அவள் மடியில் கைதவறி ஐஸ்கிரீமைக் கொட்டிவிட்டான் என் அண்ணா. எல்லாரும் கொல்லென்று சிரித்து விட, என் அண்ணா ''சாரி, சாரி'' என்று வழிய, அவளோ புன்னகை மாறாமல், ''பரவாயில்லே, கவலைப்படாதீங்க'' என் றாள். அந்தப் பொறுமை என் அண்ணாவை அந்தக் கணமே கவர்ந்துவிட இன்று அவள் என் அன்பு அண்ணி.

மனோஹரி, சென்னை 8

**''நாட்பட நாட்படப் புரியும்!''**

''நீ பழனிகிட்ட என்னைப் பத்தித் தரக் குறைவாப் பேசியிருக்க. நீ ஒரு புரூட்டஸ்!'' நண்பர் வனமாலியின் வீட்டுக்குப் போன போது எனக்கு அவர் அளித்த புகழாரம் தான் இது! நான் அமைதியாகச் சுவரில் சிரித்துக் கொண்டிருந்த காந்திப்படக் காலண்டர் மீது, ''நண்பனும் பகை போல் தெரியும்; அது நாட்பட நாட்படப் புரியும்'' என்ற கவியரசின் வரிகளை எழுதிவிட்டுத் திரும்பிவிட்டேன். மறுநாள் நண்பர் வன மாலி என்னைத் தேடிவந்து மன்னிப்புக் கேட் டார்.

சுதாமகன், புதுவை.

**''எருமை மாட்டு ஜென்மங்கள்!''**

''கோபமே வராதவர்கள் எருமை மாட்டு ஜென்மங்கள்'' என்று ஏசினாள் என் தோழி,



பலர் முன்னிலையில் மேலும் "உனக்கெல்லாம் கோபம் வந்தால் என்னதான் செய்வியோ; எப்படித்தான் அடக்கிப்பியோ?" என்று கேலி பண்ணினாள். உடனே நான் ஒரு நோட்டுப் புத்தகத்தை எடுத்து நாலுவரி "ஸ்ரீ ராமஜெயம்" எழுதிக் காட்டினேன். அதுவே ஆரம்பம். பிறகு, கோபம் வரும் போதெல்லாம் "ஸ்ரீ ராமஜெயம்" எழுதுவது வழக்கமாகி, பல நோட்டுப் புத்தகங்களைக் காஞ்சிப் பெரியவாளிடம் சமர்ப்பித்து, ஆசியும் பெற்றேன். இப்போது கோபமே வருவதில்லை என்றாலும் "ஸ்ரீ ராமஜெயம்" எழுதுகிறேன்.

விஜயலக்ஷ்மி, தாம்பரம்.

**மோதலும் தோதலும்**

பால் பூத்திலிருந்து பால் வாங்கிவரும் போது சைக்கிளில் வந்த ஒருவர் மோத, பால் அவ்வளவும் கொட்டி வீணாகி விட்டது. கோபத்தை அடக்கிக் கொண்டு, "போனால் போகிறது" என்றேன். இரண்டு நாள் சென்று நானும் என் கணவரும் புதிதாய் ரிலீஸான ஒரு படத்துக்கு டிக்கெட் கிடைக்காமல் திரும்ப நினைத்த போது அந்த சைக்கிள் நபர் தம்மிடம் இருந்த டிக்கெட்டுகளை நன்றிப் புன்முறுவலுடன் கொடுத்து உதவினார்.

ஷோபா துரை, மதுரை.

**அன்பின் சாதனை**

குழந்தைக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் போது கடிந்து திட்டுவேன். குழந்தை படிப்படியாகப் படிப்பில் பின்தங்க, என் கோபம் அதிகரித்தது. கடைசியில் மூன்றாம் வகுப்பில் அவன் ஃபெயில்! என் கணவர் காரணத்தை ஊகித்தறிந்து எனக்குச் செய்த போதனையின் பேரில் ஆத்திரத்தை உள்ளடக்கி, அன்பு வெளிப்படச் செய்து சொல்லிக் கொடுத்தேன். மகன் பிரகாசிக்க ஆரம்பித்தான். இன்று பிளஸ்—2—ல் 95 சதம் வாங்கி, உதவிப் பணம் பெற்று, பம்பாயில் புகழ்பெற்ற என்ஜினியரிங் கல்லூரியில் படித்து வருகிறான்.

திருமதி லக்ஷ்மிராமன், பம்பாய்.

**கண்டபடி கேள்விகள்**

நேர்முகத் தேர்வு. புரொபசருக்கும் எனக்கும் ஏற்கெனவே தகராறு. வேண்டுமென்றே கண்டபடி கேள்விகளைத் தொடுத்தார். ஒரே கோபம். சூடாக ஏதாவது கூறிவிட்டு எழுந்து வந்துவிடலாமா என்று நினைத்தேன். இரண்டு வருடப் படிப்பு பாழாகிவிடுமே என்பதால் பல்லைக் கடித்துக் கொண்டு சமாளித்தேன். எக்ஸ்டர்னல் எக்ஸாமினரை என் பொறுமை கவர்ந்திருக்க வேண்டும். முடிவு? தேர்வில் வெற்றி! நான் கோபப்பட்டுப் பேசியிருந்தால்...?

எம். கே. மாலிக், கொல்லம்.

**"கறுப்பு, குட்டை, சப்பை!"**

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் என்னைப் பெண் பார்க்க வந்தவருடன் வந்த அவரின் சகோதரிகள், என்னைப்பார்த்து, "கறுப்பு, குட்டை, முடியே இல்லை, சப்பை மூக்கு" என்று அநாகரிகமாகப் பேசினர். கோபம் கொப்பளிக்க நிமிர்ந்தேன். ஆனாலும் அவர் முகத்தைப் பார்த்ததும் என்னவோ தோன்ற, அடங்கிப் போனேன். அந்த அடக்கம்தான் அவரைக் கவர்ந்ததாம்; என்னையே மணம் புரிந்து கொள்வேன் என்று பிடிவாதமாய் இருந்தாராம்; அப்புறம் சொன்னார்!

எம். மேரி, செங்கல்பட்டு.

**காதல் கடிதம்**

என்னிடம் படித்த மாணவன் எனக்குக் காதல் கடிதம் எழுத, அதிர்ந்துபோனேன். தாங்க முடியாத கோபம். நான் எண்ணியிருந்தால் அவனைப் பள்ளியிலிருந்தே விலக்கி இருக்கலாம். ஆனால் ஓர் இளைஞனின் எதிர்காலமே பாழாகும் என்பதை எண்ணிப் பொறுமையாக அவனுக்குப் புத்திமதி கூறித் திருத்தினேன். இப்போது அவன் நல்ல, பெரிய உத்தியோகத்தில் இருக்கிறான். என்னைச் சந்திக்கும்போதெல்லாம், "இந்த நல்வாழ்வு நீங்கள் போட்ட பிச்சை" என்று நன்றியோடு கூறுகிறான்.

திருமதி சுசீலா, சென்னை.

**"வணக்கம் இந்தியனே!"**

எத்தியோப்பியாவில் இருந்த போது விடுமுறையில் அஸ்மாராவுக்குக் குடும்பத்துடன் போனேன். வழியில் இராணுவத்தினரின் சோதனை. கொரில்லாக்களுக்கு ஆயுதங்கள் கடத்தப்படுவதைத் தடுக்கச் சோதனை என்று கூறிக் கொண்டு, அந்தச் சாக்கில் பயணிகளின் உடைமைகள் சிலவற்றையும் அவர்கள் "அபேஸ்" செய்வதுண்டு. எங்கள் பெட்டிகளில் இருந்த பொருள்களை ஒரு சிப்பாய் இளக்காரமாய் எடுத்துத் தெருவில் இறைத்தார். அவருக்கு உபயோகமான ஏதும் கிடைக்காத கோபம்! எதிர்ப்புக் காட்டாமல் பொறுமையாகப் பொருட்களைப் பொறுக்கிக் கொண்டு பயணத்தைத் தொடர்ந்தோம். திரும்பும்போது அதே சிப்பாய், மனசாட்சி உறுத்தவே "வணக்கம், எப்படி இருக்கிறாய் இந்தியனே?" என்று புன்னகையுடன் கேட்டுப் பெட்டியைத் திறக்கக் கூடச் சொல்லாமல் அனுப்பிவிட்டான். புதிதாக வாங்கிய டூ இன் ஒன் பிழைத்தது!

ம. விசுவநாதன், ஆ. தெக்கூர்.

ராகமாலிகா வழங்கும் பட்டுப் புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:

ம. விசுவநாதன்
தலைமை ஆசிரியர்
எஸ்.வி.கே. மேல்நிலைப் பள்ளி
ஆ. தெக்கூர் 623 201

# N.S.K.

பைனான்சியர்ஸ்

# அன்பளிப்பு

## வெள்ளிக்குத்துவிளக்கு

## பாங்க் கேஷ் சர்ட்டிபிகேட்

உங்களின் முதலுக்கு பாதுகாப்பு

**18%** வட்டியுடன் டெபாசிட் தொகைக்கு உத்திரவாதம்.

## பிக்செட் டெபாசிட் திட்டம்

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்கள்

| 1 yr | 2 yrs | 3 yrs | 5 yrs |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 21% |

**24%**

வழக்கமான வட்டி விகிதங்களின் மேல் 3% கூடுதல் வட்டி. இந்த சலுகை 15-1-85 முதல் 30-4-85 வரை.

(minimum deposit acceptable Rs. 1000/- multiple)

உங்களுடைய முதலீடு 48 மாதங்களில் எங்களது "கோல்டன் கேஷ் சர்டிபிகேட் திட்டத்தின் மூலம் இருமடங்காகிறது"




**N.S.K.** பைனான்சியர்ஸ்

எண். 38.8, பர்கிட் ரோடு, (முதல் மாடியில்)
(தி.நகர் பேருந்து நிலையம் எதிர் புறம்)
தி.நகர், சென்னை—600 017. போன்: 447135

எதிர்கால சேமிப்பிற்கு என்.எஸ்.கே.

# 10

வசுமதி எடுத்த முடிவு தன்னை அவமதிப்பதாகத் தோன்றியது அரவிந்தனுக்கு. புனிதமான காதல் என்று இதுநாள் வரை அவன் நினைத்திருந்தான். ஆனால் ஒரே மூச்சில் ஒரே கைவீச்சில் வசு அவனைத் தூக்கி எறிந்துவிட்டாள்.

எத்தனையோ இகழ்ச்சிகளுக்கும், அவமானங்களுக்கும் சிறு வயதிலிருந்தே ஆளாகிய அவன் அவற்றைத் தாங்கிக் கொள்ளவும் பழகிக் கொண்டிருந்தான். இதையும் தாங்கிக் கொண்டான்.

அப்பா இறந்து போன பிறகு ஏழ்மை வீட்டினுள் புகுந்தது. கல்வியைத் தாரக்ராம் ஏற்றுக் கொண்டிருந்தார். ஆனால் நடைமுறை வாழ்க்கையில் அன்றாடத் தேவைகள் இருக்கின்றனவே? ரகுவின் படிப்பு வேறு. என்ன செய்ய? சில கிட்டிய உறவினர்கள் அவ்வப்போது உதவியும் செய்து, அதைக் கேட்கப் போகும் அரவிந்தனையும் மனமார ஏசிக் காட்டினார்கள். 'உன் அப்பனுக்குப் புத்தி இல்லே. இருந்திருந்தால் ஒரு இன்ஷூரன்ஸ் கூடவா எடுத்திருக்க மாட்டான்?' என்று ஒரு தடவை சொந்த மாமாவே வசை பாடினார். இன்னும் சில உறவினர்கள் அம்மா ருக்மணியை விசேஷ நாட்களுக்கு அழைக்கவில்லை. சிலர் அழைத்துச் சமையலறை உதவியைக் கேட்டார்கள். இதை எல்லாம் சிறு வயதில் நேரில் கண்டபோது அரவிந்தனுடைய உள்ளம் எரிமலையாகக் குமுறும். ஆனால் என்ன செய்ய? அவனால் எப்படி யாருடன் போராட முடியும்? அண்ணா ரகுவின் படிப்புக்காக அம்மா ஒவ்வொரு நகையாக விற்று, கிராமத்து வீட்டையும் விற்று உலர்ந்து போனாள். மூளியான அவளுடைய கழுத்தையும் கைகளையும் பார்க்கையில் அவனுக்கு உலகத்தின் மீதே கோபம் வந்தது. ஆனால் என்ன பயன்? ரோட் என்ஜினை அவனால் எப்படித் தடுத்து நிறுத்த முடியும்?

கூடப் பிறந்த அண்ணனும் தன் பங்கை நிறைவேற்றிக் கொண்டான். ஊர் உலகத்துக்கு அவன் மெரைன் என்ஜினியர். முதல் வகுப்பில் தங்க மெடலுடன் தேறியவன். ஆனால் அவனால் பெற்ற தாயாருக்குக் கூடப் பயனில்லை. எவ்வளவோ கஷ்டப்பட்டு அம்மா அவனுக்காக எல்லாவற்றையும் துறந்தாள். பிற்காலத்தில் அவன் அனுசரணையாக, இதமாக இருப்பான் என்று நம்பினாள். ஆனால் அவன் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. பம்பாய்த் துறைமுகத்திலிருந்து புறப்பட்ட ஒரு அர்ஜென்டைனா கப்பலில் பணியாற்றச் சென்றவன், கப்பல் கேப்டனுடைய மகளைக் கல்யாணம் செய்து கொண்டான். ஒரு வருடத்துக்கு அவன் தகவலும் சொல்லவில்லை. பணமும் அனுப்பவில்லை. பிள்ளையின் செய்கையைக் கண்டு அம்மா எப்படி மனம் கசிவாள்? என்று நினைத்துப் பார்த்தபோது அவனுக்கு அண்ணாவின் குரல்வளையைப் பிடித்து நெரிக்கவேண்டும் என்ற ஆத்திரம் வந்தது. ஆனால் என்ன பயன்?

அவன் படித்துப் பட்டம் பெற்றபின் ஒன்றை மட்டும் உறுதி செய்துகொண்டான். அம்மாவின் மனம் குளிர அவன் அவளைக் கவனித்துக் கொள்ள வேண்டும். நல்ல நாட்களைக் கண்ட அவள் கடுமையான சோதனைக்கும் ஆளாகியிருக்கிறாள். மூத்த பிள்ளை அவளை மகிழ்விக்கவில்லை. இரண்டாவது பிள்ளையான அவனும் அவளை உதாசீனப் படுத்தினால் அப்புறம் அவள் கதி என்ன?

அவன் தன் சபதத்தை நிறைவேற்றிக் கொண்டான். அம்மாவின் மனத்துயரம் முழுதும் மறைந்ததோ இல்லையோ அவள் முகம் மலர ஆரம்பித்தது. மெல்ல மெல்ல அவள் சிரிக்க ஆரம்பித்தாள். குறிஞ்சி பூப்பது போல் வந்து போன ரகுவைக் கண்டு மனம் பூரித்து, அவனுடைய மனைவியைப் பற்றி விசாரித்தாள்.

ஆனால் இந்த மகிழ்ச்சியும் நெடுநாள் நீடிக்கவில்லை. பல ஆண்டுகளாக இதயத்தில் சேர்ந்து வந்த வேதனைத் துளிகள் ஆவியாவதற்குள் அவள் ஆவி பிரிந்துவிட்டது.

இத்தகைய சூழ்நிலையில், பிறருடைய உதவியால் படித்துப் பட்டம் பெற்று ஆளாகிவிட்ட அரவிந்தன் ஒரு பாடத்தை நன்றாகவே கற்றுக் கொண்டான். வாழ்க்கையில் முன்னேற நிதானமும், பொறுமையும் இன்றியமையாதவை.

கடந்த நான்காண்டுகளாகப் பிரச்னைகள் இல்லாத வாழ்க்கை. இந்த வாழ்க்கைக்கு அடி கோலியவர் தாரக்ராம். அவனுடைய அப்பா செய்ய வேண்டியதை அவர் ஏற்றுக் கொண்டு செய்திருக்கிறார். அவருக்கு அவன் கடன்பட்டிருக்கிறான். கடனைத் திருப்பிக்

ஸ்ரீவில்லிபுத்தூரில் எந்தச் சாப்பாடு ஹோட்டலில் சாப்பிட்டாலும் சரி; ரசம், மோர் எதுகேட்டாலும் சாப்பிடும் இலைக்கு முன் வைத்து விடுகிறார்கள். நாமே இஷ்டம்போல் வேண்டிய மட்டும் போட்டுக் கொள்ளலாம். சிலர் உள்ளங்கைகளில் ஊற்றியும் சாப்பிடுகிறார்கள். இதற்கு தனியே காசும் கிடையாது!

—எஸ். எஸ். மணியம்.



கொடுக்க வேண்டியது அவனுடைய கடமை.

ஆனால் பண்டமாற்று வியாபாரம் இப்படி ஒரு பூதமாக எழும் என்று அவன் நினைக்கவில்லை. வாய் வார்த்தைகளால், அவருடைய நிறுவனத்தில், உயிரைவிட்டு உழைக்கும் ஊழியத்தால் தன் கடனைத் திருப்பிக் கொடுக்க அரவிந்தன் நினைத்திருந்தான்.

ஆனால் அவர் வேறு விதமாகக் கேட்கிறார். அவருடைய மன பலவீனம் கொண்ட மகளுக்குக் கணவனாக வந்தால் அவன் அவருக்குப் பட்ட கடன் தீர்ந்துவிடும் என்று தாரக்ராம் கணக்குப் போட்டுக் காட்டுகிறார்.

அவனால் ஒரே வார்த்தையில் 'முடியாது' என்று சொல்ல முடியும். அப்படி அவன் பதிலளித்தால் அவரால் ஒன்றும் செய்ய இயலாது. பின் ஏன் அரவிந்தன் இந்த 'முடியாது' என்ற ஒரு வார்த்தையைச் சொல்லவில்லை? தாரக்ராம் என்னென்னவோ சொல்லிப் புலம்பி அழுதார். கோமளி சாகுந் தறுவாயில் ஆசைப்பட்டாளாம். ரங்கன் ஆசைப்பட்டானும். ருக்மணி கோவில் சந்நிதியில், கோமளி இடுப்புக் குழந்தையுடன் இருக்கும் போது வாக்குக் கொடுத்தாளாம். இந்தச் சொல் ஜாலங்களில் அரவிந்தன் மயங்கவில்லை. அவனை இணங்க வைக்கத் தாரக்ராம் பல உபாயங்களைத் தேடுகிறார்.

வசுமதியுடன் அவன் பழகி, அவளுக்கு அசையாத நம்பிக்கையும் கொடுக்காமல் இருந்தால், தாஜ் ஒட்டலில் ஏற்பட்ட சந்திப்பின் போதே 'நான் தயார்' என்று அரவிந்தன் கூறியிருப்பான். கடனை வேறு எந்தவகையில் தீர்க்கலாம் என்ற யோசனை எழுந்திராது. ஆனால் அப்போது அவன் 'வசுவின்' காதலன். காதல் வாயைக் கட்டிப் போட்டிருந்தது.

இரண்டு நாட்களில் நிலைமை மாறியது. அதுவும் எப்பேர்ப்பட்ட மாற்றம்!

வசு அவனை நண்பனாக ஏற்றுக்கொண்டு காதலைத் துறந்தாள். அவள் மனத்தை மாற்ற அரவிந்தன் முயலவில்லை. ஏன் மாற்ற வேண்டும்? அவள் தீர யோசித்து ஒரு முடிவு எடுத்து அவனிடம் தெரிவித்திருக்கிறாள். ஒரு விதத்தில் அவள் அவனை ஏமாற்றிவிட்டாள். அவனால் என்ன செய்ய முடியும்?

எல்லாம் தாரக்ராம் விளையாடுகிற ஆடு புலி ஆட்டம் என்று புரிந்துவிட்டது. அரவிந்தன் எப்படியாவது தமது மருமகனாக வர வேண்டும் என்று அவர் தீர்மானித்துச் செயல்படுகிறார். சுருக்கமாகச் சொல்லப் போனால் கடனைத் திரும்பப் பெறப் பல சாகசங்களைச் செய்கிறார்.

அவர் கேட்கும் நாணயத்திலேயே அவன் அவருடைய கடனைத் தீர்ப்பான்.

* * * * * *

மாயா வந்தாள்.

அரவிந்தன் எழுந்தான்.

பார்த்தான்.

அவள் அவனை ஊடுருவிப் பார்த்தாள்.

அவனுடைய கண்கள் எத்தனையோ பெண்களின் கண்களைப்போல இருக்கவில்லை. விழிகளுக்கு அப்பால் இனம் புரியாத ஒரு ஒளி சூட்சுமமாக மின்னுவதான பிரமை ஏற்பட்டது.

'இவளுக்கா மன பலவீனம்?' என்று வாய் விட்டுக் கேட்க வேண்டும் போலத் தோன்றியது. அடக்கிக் கொண்டான்.

திடீரென்று கண்களில் பரஸ்பர அழைப்பு நிற்க மாயா சிரித்தாள்.

''யார்ப்பா இந்த ஆள்? எங்கேயோ, எப்பவோ பார்த்த மூஞ்சியா இருக்கு?'' என்றாள்.

''நம்ம அந்து, மாயா! அந்து! சின்ன வயசிலே மணல்லே கோபுரம் கட்டி விளையாடுவீர்களே! அந்த அந்து!'' என்ற தாரக்ராம், ''வா, மாயா உட்கார்!'' என்றார்.

''எதுக்கு வந்திருக்கான்?''

''உன்னைப் பார்க்க.''

''எதுக்கு என்னைப் பார்க்கணும்?''

''சார்,'' என்று இடைமறித்தான் அரவிந்தன்.

அவர் கண்களால் 'ஏன்?' என்று கேட்டார்.

''ஒரு அஞ்சு நிமிஷம் நானும் இவளும் தனியா இருக்கிறோம்.''

''ஷ்யூர்... மாயா நீ பேசிண்டிரு... இப்ப வந்துடறேன்...''

தாரக்ராம் எழுந்தார்.

''என்னப்பா இருக்கு இவன் கூடப் பேச?''

''இவன்னு மரியாதைக் குறைவாகப் பேசப் படாது.''

''அதனால் என்ன சார்?... நீங்க போங்க. மாயா நீ எப்படி வேணுமானாலும் பேசும்மா.. நீ எப்படிப் பேசினாலும் எனக்குப் பிடிக்கும். என் பேர் அரவிந்தன்... நான் ஒரு என்ஜினியர்... இப்போ மெட்ராஸ்லேந்து வர்றேன்... எதுக்குத் தெரியுமா...?''

''தெரியாது.''

''உன்னைப் பார்க்க...''

''எதுக்கு என்னைப் பார்க்க வரணும்?''

''உன்னை நான் கல்யாணம் பண்ணிக்கணும்னு உன் அப்பா ஆசைப்படறார்...''

''உனக்கு என் மேலே ஆசை இருக்கா?''

''நிச்சயமா.''

''அப்போ அப்பா சொல்றபடி கல்யாணம் பண்ணிக்கப் போறியா?''

''ஆமாம்.''

''ககா... ககா... ககா... ககா...''

''என்ன பேசறே? புரியலேயே?''

''இது கூடவா புரியலே? 'க' ஞ பாஷை பேசறேன்!''

''ஆனா எனக்கு ஆசை இல்லையே...''

''ஏன் என்னைப் பிடிக்கலையா?''

''உன்னை என்ன, எனக்கு யாரையுமே பிடிக்கலே... அப்பாவைப் பிடிச்சிருக்கு... ராஜம்மாவைப் பிடிச்சிருக்கு... ராஜம்மா யார் தெரியுமா?''

''தெரிஞ்சுக்கறேன்... ஏன் என்னைப் பிடிக்கலே, மாயா...''

''முதல்ல ராஜம்மா யாருன்னுத் தெரிஞ்சுக்கோ... என் அம்மா மாதிரி.''

''உன் அம்மா பேர் சோமனி. அவளுக்கு என்னை ரொம்பப் பிடிக்கும்.''

''என்ன புண்ணியம்? அவ செத்துப் போயாச்சே?''

''செத்துப் போறதுக்கு முன்னாடி கூட, நான்தான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கணும்னு உன் அம்மா சொன்னா.''

''யார்கிட்டே சொன்னா? உன்கிட்டேயா? அப்ப நீ ஸ்விட்சர்லாந்திலே இருந்தியா?''

''உன் அப்பா சொன்னார்.''

''அப்பா சில சமயத்திலே பொய் சொல்லுவார்... என்னைச் சமாதானப்படுத்த டெய்லி ஏதாவது ஒரு பொய் சொல்லுவார்.. ஆனால் நான் அதை நம்பறேன்னு நினைப்பு அவருக்கு.''

''இது பொய்யில்ல, மாயா. சத்தியம்....''

''எல்லா ஆம்பிளைகளும் ரோக்ஸ்னு நான் நினைக்கிறேன். நீ என்ன நினைக்கிறே... உன் பேர் என்னன்னு சொன்னே?''

''அந்து... அரவிந்தன்...''

''ஓ! நீதானே ஒரு ஆஸ்பத்திரியில என்னோட சேர்ந்து உட்கார்ந்திருந்தே இல்லே?... அந்துங்கற பேர் எனக்குப் பிடிக்கலே... ஏன் ஒரு ஆம்பிளையுமே எனக்குப் பிடிக்கலே... எல்லாரும் ரோக்ஸ்... ஒரு பொண்ணைப் பார்த்தா ரேப் பண்ண ட்ரை பண்ணுவான்...''

''நான் ரோக் இல்லே மாயா!''

''எப்படி நம்பறது?''

''நான் ரேப் பண்ண வரலே, மாயா... கல்யாணம் பண்ணிண்டு உன்னோடேயே இருக்கலாம்னு வந்திருக்கேன்... என்னென்னிக்கும் உன்னைப் பார்த்துண்டு, எப்பவும் நீ சந்தோஷமா இருக்கணும்னு நினைச்சி நான் வந்திருக்கேன்...''

''எனக்கு என்னவோப்பா நீ சொல்றதும் பொய் மாதிரிப் படறது. நம்ப முடியல...''

''சத்தியமா... என் அம்மா மேலே சத்தியமா.'' அவளுக்கு அனுசரணையாகவே அவன் பேசினான்.

''உன் அம்மா எங்கே? ஏன் அவ வரலே!...''

''என் அம்மா செத்துப் போயாச்சு.''

''என் அம்மாவும்தான் செத்துப் போயிட்டா. அம்மா சொர்க்கத்துல இருப்பா... அவ மேல் சத்தியம் பண்ணறே. சத்தியத்தை மீறினால் நீ நரகத்துக்குப் போயிடுவே.''

''மாட்டேன். நான் நரகத்துக்குப் போயிட்டா, அப்புறம் உன்னை யார் மாயா, கவனிச்சிப்பா? நீ எனக்கு ஒய்ஃபா வந்தா, அப்புறம் ஒனக்கு எப்பவும் குஷிதான். ஜாலிதான்.''

''சினிமாவுக்கெல்லாம் அழைச்சிட்டுப் போவியா?''

''நிச்சயமா.''

''அதைப் பார்த்துட்டு அப்புறமா வீட்டுக்கு வந்து என்னை ரேப் பண்ணுவியா?''

''சீச்சீ... ரேப் பண்றது ரொம்ப தப்பு. வில்லன் பண்ணுவான். ஏன்னா வில்லன் ஒரு ரோக்!''

''அப்போ சத்தியமா நீ ஒரு ரோக் இல்லே! என்னை ரேப் பண்ண மாட்டே!''

''சத்தியமா!''

''உன் அம்மா மேலே சத்தியம்பண்ணு!''

''அம்மா மேலே சத்தியமா!''

''ஓ. கே, நாம ரெண்டு பேரும் கல்யாணம் பண்ணிப்போம்! நோ ப்ராப்ளம்... பாவம், இதுக்குன்னு நீ மெட்ராஸ்லேந்து வந்திருக்கே... டாடி... டாடி... கம் ஆன் டாடி! கம் ஆன்! வி ஆர் கெட்டிங் மேரீட்!''

மாயா சிரித்தாள்.

சிரிப்பின் ஒலி அரவிந்தனைத் தாக்கியது.

அவள் சிரித்துக் கொண்டே போனாள். நிறுத்தவில்லை.

அரவிந்தன் நடுங்கவில்லை. அவனுடைய நரம்புகள் பதறவில்லை.

அவன் அவளைப் புரிந்து கொண்டான். சவாலாக ஏற்றுக் கொண்டான்.

அக்கணமே அவள் தன்னுடைய மனைவியாகிவிட்டதான எண்ணம் உண்டாகியது.

இப்போது மனத்தை எங்கேயோ வைத்துவிட்டுச் சிரிக்கிற மாயாவை இயற்கையாக மனம் புல்லரித்துச் சிரிக்க வைக்க வேண்டியது அவனுடைய கடமை.

தாரக்ராமுக்கு அவன் செலுத்தும் கைம்மாறு.

அவள் இன்னும் சிரித்துக் கொண்டிருந்தாள்.

அதை அடக்க அவன் முயலவில்லை. கண்ணாடியின் ஒரு பட்டையை அவன் ஏன் தன் கையால் மறைக்க வேண்டும்? அப்படி மறைத்தால் இன்னொரு பட்டையிலிருந்து வேறுவிதமான ஒளிக்கதிர்கள் வெடிக்கக் கூடுமே?

திடீரென்று தாரக்ராம் மருந்துடன் வந்தார்.

(தொடரும்)



**வருகை தாரீர்!**

# விஜிபி - யின்

# வாழுங்கள் வசதியாக

## கண்காட்சி

சென்னையில் சொநதமாக வீட்டுமனை வாங்க ஓர் அரிய வாய்ப்பு!

உங்கள் தேவைக்கேற்ற கடற்கரையோர மனைகள், தொழிற்சாலைக்கேற்ற மனைகள்.

குடியிருப்போருக்கென மனைகள் மேடவாக்கம், தாம்பரம், ஸ்ரீபெரும்புதூர், படப்பை, கூடுவாஞ்சேரி மற்றும் பல இடங்கள்.

பல மாதிரி வீடுகள் நீங்கள் விரும்பும் வண்ணம் உங்கள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளது.

முன்பணம் 25 சதவீதம் செலுத்தி மீதம் 24 சுலபத் தவணைகளில் பெறலாம்.

வீடு கட்ட கடன் வழங்கும் வங்கிகளில் கடன்வசதி ஏற்பாடு.




SOBHAGYA

மற்றும் இக்கண்காட்சி விஜிபி ஷோரூம், ரத்தன் பஜார், சென்னை-3-ல் நடைபெறுகிறது. போன்: 39649.

வங்கி மானேஜர் தம் அறையில் முக்கிய அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருந்தார். எதிரில் வேட்டி, ஜிப்பாவுடன் கையில் ஒரு ஃபைலையும் வைத்துக் கொண்டு ஒரு நபர் "வணக்கம், ஸார்! சுயதொழில் நடத்த வங்கியின் கடன் தேவை, ஸார்" என்று விண்ணப்பத்தைச் சமர்ப்பித்தான்.

"எவ்வளவு தொகைக்கு விண்ணப்பம்?" என்றார் மேனேஜர்.

"இருபத்தையாயிரம், ஸார்!"

"உட்காருங்கள். இதோ வந்துவிட்டேன்!" என்று சொல்லும் பொழுது ஹாலில் ஏதோ பாங்க் ஊழியருக்கும், பொதுஜன நபர் ஒருவருக்கும் நடந்த வாக்குவாதம் மேனேஜரை அவ்விடத்திற்கு இழுத்தது. ஒருவிதமாக அதைச் சுமுகமாக முடித்துவிட்டு "எங்கே உங்கள் விண்ணப்பத்தாள்?" என்று முன்பே மேஜையின்மேல் வைத்திருந்த தாளைப் படிக்கலானார்.



# கடனுக்குக் கருத்தரங்கு

"நீங்கள் செய்யப் போவதாய் எழுதியிருக்கிற தொழில் விளக்கமாய்த் தெரியவில்லையே. அதையொட்டித்தான் வங்கியின் கடன் கொடுப்பது நிச்சயிக்கப்படும்" என்றார் மானேஜர்.

"அதுவா ஸார், இப்ப பாருங்க. எந்த விஷயமாயிருந்தாலும் அதைப்பற்றி விவாதித்துத் தெரிந்து கொள்ள ஒரு கருத்தரங்கு என்ற பழக்கம் இருக்கிறது. வருஷத்தில் 365 நாட்களிலும் கருத்தரங்கு இல்லாத நாளே கிடையாது" என்று சொல்லிக் கொண்டே கைப்பையில் வைத்திருந்த நாளிதழில் பிரசுரிக்கப்பட்ட கருத்தரங்குச் செய்திகளைக் கத்தரித்து வைத்திருந்த தஸ்தாவேஜுகளை மானேஜரிடம் காண்பித்தார்.

"நான் வாய்ப் பேச்சாய்ச் சொல்லவில்லை, ஸார். என்ன தொழில் செய்யப் போகிறேன், அதிலிருந்து எவ்வளவு ஊதியம் வரும் வங்கிக் கடன் வட்டியையும், முதலையும் திருப்பிக் கொடுக்க. அதற்காகவே இவ்வளவு கருத்தரங்குகளைப் பற்றிய தகவல்களை நான் சேகரித்து வைத்திருக்கிறேன். போன வருஷம் நடத்திய கருத்தரங்குகளின் செய்திகள், புகைப்படங்கள்! என்று செய்தித்தாள் 'கிளிப்பிங்'குகளை ஒவ்வொன்றாக மானேஜருக்குக் காட்டினார்.

"நீங்கள் என்ன கருத்தரங்கு நடத்துவதாக உத்தேசம்? அதிலிருந்து வங்கியின் கடனை எப்படித் திருப்பிக் கொடுக்க முடியும்?" என்று மானேஜர் அவர் சந்தேகத்தைத் தெரியப்படுத்தினார்.

"நான் ஒரு கருத்தரங்கையும் நடத்தப் போவதில்லை ஸார், எந்தக் கருத்தரங்காய் இருந்தாலும் அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் — மேஜை நாற்காலி சப்ளை, மைக், இடைவேளை உணவு சப்ளை, கருத்தரங்கில் பங்கு கொள்வோருக்குச் சட்டையில் மாட்டிக் கொள்ள பாட்ஜ், சில கருத்தரங்குகளில் பங்கு கொள்வோருக்குத் தோல் பையோ, துணிப் பையோ இலவசம், இப்படிக் கருத்தரங்குகளைச் சரிவர நடத்த வேண்டிய ஏற்பாடுகளை எல்லாம் நான் செய்து கொடுப்பேன். போன மாதம் என் கைப்பணத்தைப் போட்டு இரண்டு, மூன்று கருத்தரங்குகளை இந்தப் பட்டினத்திலேயே நடத்த ஏற்பாடு செய்திருக்கிறேன். இதோ அதைப்பற்றிய நற்சாட்சிப் பத்திரங்கள்" என்று அதையும் காண்பித்தான்.

**அப்சரஸ்**



"கருத்தரங்குகளுக்கு ஏற்பாடு செய்யப் பண உதவி கேட்கிறாய். நீ எந்தக் கருத்தரங்கிலும் ஒரு பங்கும் கொள்ளப் போவதில்லை. அதுதானே" என்றார் மானேஜர்.

"அதேதான் ஸார், எனக்கு கருத்தரங்குகளின் ஏற்பாட்டைத் தவிர வேறு ஒருவிதப் பங்கும் கிடையாது. இன்று "கடைகள் மூடலாமா, கூடாதா...? ஹர்த்தால்களால் எவ்வளவு நஷ்டம்?" என்ற கருத்தரங்காய் இருக்கலாம், அடுத்த நாளே "ஜனங்களின்

விவா: நமது தேகப் பராமரிப்புக்குத்
தேவையான வைட்டமின்கள்
அடங்கியது. பார்லி, கோதுமை
இவற்றின் மால்ட் சத்துக்கள்,
ஆடைப்பால் இவை நிறைந்தது.
பாலிலேயும் சரி, நீரிலேயும் சரி
கலக்க இலகு. ஜீரணிக்க
எளிதானது.
இவையனைத்தும் சேர்ந்து.

**சளைக்காத தெம்பு தருவது விவா**

எனவே கணக்கற்ற குடும்பங்கள்
விரும்பி அருந்துவது விவா.
தெம்புக்கும், தேக ஆரோக்கியத்
துக்கும் எப்போதும் தேவை—விவா.




**"தெம்பு தரும் விவா உனக்கு நன்றி!"**

**JiL** ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

ASP/JIL-8


அதிருப்தியை எப்படித் தெரிவிப்பது?'' என்ற கருத்தரங்காய் இருக்கலாம். அதனாலே ஏற்பாடு ஒன்று மட்டும்தான் என் தொழில். எந்தக் கருத்தரங்காய் இருந்தாலும் மேஜை, நாற்காலி; மைக், பேட்ஜ், மதிய உணவு எல்லாம் ஒன்றுதானே. அதனால்தான் அந்தத் தொழிலுக்குக் கடன் தேவைப்படுகிறது. வருஷம் பூராவும் தொழில் நடக்கும். என்றால் அநேகம் சிறு தொழிலாளருக்கும் வேலை வாய்ப்பு உண்டு. பேச்சு மேடைக்கு அலங்காரம். பூக்காரனுக்கு வாய்ப்பு உண்டு. இம்மாதிரி இருப்பதால்தான் உங்களிடம் அணுகினேன். இதுவும் உற்பத்திப் பெருக்கை மறைமுகமாக ஊக்குவிக்கிறது பாருங்கள்.''

வங்கி மானேஜர் இவன் சொல்வதை நன்றாகக் கேட்டுக் கொண்டார்.

''இன்னும் ஒரு விஷயம் ஸார், இப்பொழுதெல்லாம் கருத்தரங்கை ஒட்டி ஒரு கண்காட்சியும் வைக்கிறார்கள். கண்காட்சி எப்படிக் கவனத்தை ஈர்க்கும்படி செய்யலாம் என்று . கூடத் தகவல்கள் சேகரித்துக் கொண்டு வருகிறேன். மற்ற தேசங்களில் கண் காட்சிகள் எப்படி ஏற்பாடு செய்யப் படுகிறது என்று கூடப் படித்துக் கொண்டு வருகிறேன், ஸார் நீங்கள் கொஞ்சம் தயவு பண்ண வேண்டும். மாதத் தவணையில் தடங்கலே இருக்காது ஸார்'' என்று ஊர்ஜிதமாய்ச் சொன்னான்.




வங்கி மானேஜர் யோசனையில் ஆழ்ந்தார். அப்பொழுது ''போஸ்ட்'' என்று தபால் ஊழியர் ஒரு கத்தைக் கடிதத்தைக் கொடுத்தார். மானேஜர் ஒவ்வொன்றாகத் திறந்து பார்த்தார். ''அதிவிரைவில் மாறி வரும் வாழ்க்கையில் வேலை வாய்ப்பு எப்படி எப்படி ரூபம் எடுக்கிறது?'' என்பதைப் பற்றி ஒரு கருத்தரங்குக்கு வங்கி மானேஜர் என்ற ஹோதாவில் அழைப்பிதழ் ஒன்று. ''காலத்திற்குத் தகுந்த கண்ணோட்டம் வேண்டும்'' என்ற மற்றொரு கருத்தரங்கிற்கு மற்றொரு அழைப்பிதழ். அதைப்போல் இரண்டு கண்காட்சிகளுக்கு வரும்படி அழைப்பு.

''சரி, நாளை வாருங்கள், விண்ணப்பத்தை நன்றாகப் பரிசீலித்துச் சொல்கிறேன்'' என்று அவனை அனுப்பிக் கருத்தரங்குக்காக வந்த அழைப்பிதழ்களை ஊன்றிப் படித்தார். கடனுதவிக் கேட்டு வந்தவன் உருவம்தான் விசுவரூபமெடுத்து எதிரில் நின்றது.

# அடைக்கலம்

## நா. நாகராஜன்



சண்முகத்தாய் வந்து விஷயத்தைச் சொன்ன போது முதலில் சாதாரணமாகத் தான் இருந்தது! இதனால் என்ன! ஒரு உதவி தானே! ஒருத்தருக்கொருத்தர் இதுகூடச் செய்யாவிட்டால் பிறகு பழக்கத்திற்கு என்ன அர்த்தம்? இந்தச் சின்னக் காரியத்திற்குப் போய் இவ்வளவு தயவு பண்ணிக் கேட்பானேன் என்றிருந்தது.

''அம்மா! இன்னிக்கு ஒரு ராத்திரி மட்டும் என் மகள் இங்கே தங்கறதுக்கு, இடம் கொடுத்தீங்கன்னாப் போதும். நாளைக் காலைல அவள் முதல் பஸ்ஸைப் பிடிச்சு மதுரைக்குப் போயிடுவா! அவ புருஷனுக்கு அவன் இந்த ஊருக்கு வந்திருக்காங்கற விஷயம் மட்டும்தான் தெரியும்! என் வீட்டையோ, எங்க சொந்தக்காரங்க வீட்டையோதான் சுத்தி வந்து சந்தேகப்படுவானே தவிர... உங்க வீட்டை மோப்பம் பிடிக்க முடியாது...''

சண்முகத்தாய் எங்கள் வீட்டுப் பால்காரி. எனக்கு நினைவு தெரிந்து இருபத்தைந்து வருஷங்களாகத் தினமும் காலையில் பால் செம்பும், சிரித்த முகமுமாக வருவாள். இப்போது அடைக்கலம் தேடி வந்திருக்கிறது அவளின் ஒரே பெண் சொர்ணம். சண்முகம் தன் தம்பிக்குத் தரக் கூடாது என்ற நோக்கத்துடன் எவ்வளவோ முயன்றும் எண்ணம் ஈடேறவில்லை. குடித்துவிட்டு, சைக்கிள் கடை என்ற பெயருக்கு ஏதோ ஒரு கடை நடத்தும் அவள் தம்பியின் ரவுடித்தனத்தை மீறி யாரும் சொர்ணத்தைப் பெண் எடுக்க முன்வரவில்லை.

சொர்ணம் நிறையத்தான் அனுசரித்துப் போய் இருக்கிறாள். அவன் கேட்டபோதெல்லாம் நகையும், பணமுமாய் யோசிக்காமல் கொடுத்திருக்கிறாள். அவன் யாருடனோ கள்ளத் தொடர்பு வைத்திருக்கிறான் இந்த நகை கூட அதற்குத்தான் என்று தெரிய வந்த போது உள்ளுக்குள் துடித்து, இதைப் பெரிது படுத்திவிடாமல் தடுத்து நிறுத்த வேண்டும், அதனால் தனக்குத்தான் அவமானம் என்று வெளியில் காட்டாமல் மறைத்திருக்கிறாள். இருந்தாலும் ஒரு நாள் கோபத்தில், சண்டையில், வாய் வார்த்தையில் அவள் அவன் நடத்தையைப் புற்றிச் சந்தேகித்துச் சில வார்த்தைகளை வீச, அத்தனை நாள் அவன் மேல் தேக்கி வைத்திருந்த கரிப்பு, கசப்பு, பகைமை, எரிச்சல் விஸ்வரூபம் எடுத்திருக்கிறது.

அவன் சொர்ணத்தின் இந்தப் பாய்ச்சலை எதிர்பார்க்கவில்லை.

''ஆமாய்யா! நீ கேட்டதெல்லாம் குடுத்துட்டு வேற ஒருத்தன்ட்ட போய் வாங்கிக் கொடுன்னு கேக்கப் போறேன். என்னைக் கண்டிக்கிற ஆம்பளையோட நடத்தை எனக்குத் தெரியாதா?''

தன் வாதம் நியாயம் இழந்ததும், வலுவைக் காட்ட ஆரம்பித்திருக்கிறான் அவன்.

அத்தனை அடிகளையும் எதிர்ப்புக் காட்டாமல் சத்தம் போடாமல் வாங்கியிருக்கிறாள் அவள்!

சுவரில் தலையை இடித்ததில் நெற்றி புடைத்துக் கொண்டது. தலை கிர்ரென்று சுற்றியது.

வலி!

அவள் தொய்ந்து விழுந்த போதும் இடது காலால் அவள் இடுப்பை மிதித்துவிட்டுப் போனான்.

அவனுக்கும் இந்தப் போராட்டத்தினால் சோர்வு ஏற்பட்டிருக்க வேண்டும்! இருநூறு மில்லியடிக்கக் கடையை நோக்கி நடந்தான்!

அந்த நேரத்தில் சொர்ணம் தன் நிலையை நினைத்துப் பார்த்திருக்க வேண்டும்!

அந்த இரவும், அவன் மிருக வெறியும், அவளின் காயங்களும் அவளுக்கு ஒரு பாடத்தையும் போதித்து, பாதையையும் காட்டி இருக்க வேண்டும்!

உயிருக்கும், மானத்திற்கும் பயந்து அவள் அவன் வருவதற்குமுன் வீட்டைவிட்டு இறங்கி அம்மாவின் வீட்டிற்கு அவசரமாகப் போனாள்.

அவன் வந்து பார்த்த போது அவள் இல்லை. கூட்டம் கூடியதும் சத்தத்தை அதிகப்படுத்தினான். ''ஓடுகாலிக் கழுதை! திமிர்ப் பிடிச்சவ! அழகால மயக்கி எவனையோ இழுத்துக்கிட்டு ஓடிட்டா! திரும்பி வராமலேயா போயிடுவா? வரட்டும்! வந்தா ஒரே

போடாப் போட்டுக் கதையை முடிச்சிருதேன்…''

வீட்டை விட்டு வந்த மகளை மதுரையிலிருக்கிற ஒரு தெரிந்த டாக்டரின் வீட்டு வேலைக்கு அனுப்பினான் ஷண்முகம். அங்கே ஒரு அனாதை மாதிரி ஊர் நினைப்போ, உறவின் நினைப்போ இல்லாமல் காலம் கழித்திருக்கிறாள்.

இதோ இன்று வந்ததுகூட தன் தாயின் உடல்நிலை சரியில்லை என்று கேள்விப்பட்டுப் பார்க்க ஓடி வந்திருக்கிறாள்.

விஷயம் எல்லாம் கேட்டு முடித்ததும் அம்மா ஷண்முகத்திடம் சொன்னாள்:

''இன்னிக்கு வீட்டில் அவர் கூட இல்லே! ஒரு அவசரவிஷயமா வெளியூர் போயிருக்கார்! இருந்தாலும் உன்னோட நிலைமையை உத்தேசிச்சுத் தங்க இடம் தர்றேன்…''

எனக்கு அம்மார்வின் பேச்சும், பெருந்தன்மையான மனசும் பிடித்திருந்தது.

அம்மாவின் நம்பிக்கையில் சண்முகம் வீடு திரும்பினான்.

சொர்ணம் கையைத் தலையணையாக வைத்துக் கொண்டாள்.

''இப்போ நீங்க என்ன படிக்கறீங்க…?'' என்று கேட்டாள்.

''பி.எஸ்.சி…''

''அது படிச்சு முடிச்சதும் வேலை கிடைச்சுடுமா? என்ன வேலை, எந்த இடத்துல கிடைக்கும்! சம்பளம் நெறைய வருமா? உங்களுக்குப் பெரிய எடத்துல வேலை கிடைச்சதும் நானே உங்க வீட்ல வந்து வேலைக்காரியா சேர்ந்துடறேன். தெரிஞ்ச இடம். ஆபத்தில்லை.''

''சே… சே…'' என்ன சொர்ணம்! என்னென்னவோ பேசறே! ரொம்பக் குழம்பிப் போய்க் கெடக்கறே போல! தூங்கு'' என்றேன்.

பத்துமணியளவில் தெருவில் நிசப்தம் குடிகொள்ள ஆரம்பித்த சமயம் வீட்டுக் கதவை யாரோ முரட்டுத்தனமாகத் தட்டுவது கேட்டது!



அம்மா என்னை உசுப்பினாள்.

''வாசல்ல யாரு பாரு? ஒருவேளை அவனா இருந்தான்னு கேட்டான்னால் சொர்ணம் இங்கே இல்லைன்னு சொல்லிக் கதவைச் சாத்திடு!''

ஜன்னலைத் திறந்து பார்த்தேன்! அவனே தான்!

குடித்துவிட்டு வந்திருப்பான் போலும்! கண்கள் இரண்டும் இரத்தச் சிவப்பாய் இருந்தன. தலை கலைந்து நெற்றியில் கற்றையாகக் கிடந்தது. கைலியை உயர்த்திக் கட்டியிருந்தான். மார்பை ஒரு குத்தாலம் துண்டால் மறைத்திருந்தான். வலது கையில் ஒரு புது அரிவாள்!

ஒரு நிமிஷம் மயக்கம் வந்தது! பயமாக இருந்தது! ஜன்னலை மட்டும் திறந்து பார்த்தேன்! கதவைத் திறக்கவில்லை. ''யாரு...?'' என்றேன். அவன் கவனம் கலைந்து ஜன்னல்



பக்கம் வந்து நின்றான்.

''சொர்ணம் இருக்காளா...?''

நான் தலையாட்டினேன்.

''பொய். அவளை இங்கே பார்த்ததா ரிக்ஷாக்கார மாடசாமி சொன்னான். சாமி நீங்க படிச்சவங்க. நியாயமா நடந்துக்குங்க! அவ என் பெண்டாட்டி. இங்கே பூட்டி வைக்கறது நியாயமான காரியம் இல்லே...'' பேச்சினூடே சாராய நெடி அடித்தது.

''அவ இல்லேங்கறேன் இல்லே! வம்பு பண்ணாம போயிடு! ஆமாம்...'' என்றாள் அம்மா அதட்டலான குரலில்.

ஜன்னல் அடைக்கப்பட்டது.

பின்னாலிருந்து குரல் கேட்டது.

''பாத்திருதேன்! சொர்ணம்! எவ்வளவு நேரந்தான் நீ அடைஞ்சுக் கெடந்திருதேன்னு பாத்திருதேன்! என்னிக்காவது வெளில தலையைக் காட்டித்தானே தீரணும்? அப்போ ஒரே வெட்டாப் போட்டிருதேன்! ஓடுகாலிக் கழுதை! உனக்கு என் கையால தான் சாவு...

இன்னும் ரெண்டு மூணு நாளைக்குக் காத்துக்கிட்டு இருக்கறதுல தப்பு இல்லே...''

அவன் எச்சரிக்கை கேட்காமலிருக்கத் தலையோடு சேர்த்துப் போர்த்திக்கொண்டு படுத்தாள் சொர்ணம்.

இருந்தாலும் மனசு விழித்துக் கொண்டு தான் கிடக்கிறது. அதற்கு அவன் பேச்சுக் கேட்டது-சத்தம் இல்லாமல் அழுதாள். கண்ணீர் சூடாக இறங்கியது. இவ்வளவு நேரம் இருந்த சந்தோஷம் இப்போது இடம் தெரியாமல் மறைந்து போனது. அவன் பேச்சையும், கொலைவெறியையும் நினைத்தால் குடல் நடுங்கியது.

''பாவி மனுஷன்! வஞ்சம் வச்சுக்கிட்டில்ல அலையுது. இவன் இதெல்லாம் மறந்து கொஞ்சம் மாறிப் போயிருப்பான்னு எதிர் பார்த்தது எவ்வளவு பெரிய தப்பு! இப்போ எப்படி ஊர் போய்ச் சேர்றது? அதுவும் போழுதுன்னு என்னால இவங்களுக்கு எவ்வளவு இடைஞ்சல்!

அவளுக்கு உறக்கம் வரவில்லை! அம்மாவின் நியாபகம் வந்தது. அவளும் இந்நேரம் பயத்தின் மடியில்தான் படுத்திருப்பாள்.

ஒரு எலெக்‌ஷனில் நின்று தோற்று எல்லாச் சொத்தையும் கரைத்து... குடித்தே இறந்து போன அப்பாவின் ஞாபகம் வந்தது.

''ஒரு நிமிஷம் கதவைத் திறந்து அவனை நேருக்கு நேர் பார்த்து. 'உனக்கும் எனக்கும் எந்தவிதச் சொந்தமும் இல்லே' என்று சொல்லிவிடலாமா?'' என்று கூட ஆத்திரம் பீறிட்டது நெஞ்சில்!

குடிகாரனாய் மட்டும் இருந்தால் பேசலாம். இப்போது அவன் கொலைவெறியனாகவும் இருப்பதால் தன் நியாயம் எடுபடாது என்று தன்னைத் தேற்றிக் கொண்டாள்.

அந்த இரவு 'நீண்டுகொண்டே போய் விடாதா என்று ஆதங்கமாக இருந்தது. ஒரு மணி நேரத்திற்கு ஒரு முறை உள் விளக்கைப்

ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம :

லிப்கோவின் மகத்தான வெளியீடு !

கீர்த்தனாசார்ய ஸ்ரீ உ. வே. C. R. ஸ்ரீநிவாஸய்யங்கார் அவர்களின்

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்



தமிழ் வசனம் ★ ஐந்தாம் பதிப்பு

**பால காண்டம் முதல் யுத்த காண்டம் முடிய இரண்டு பாகங்களில் மொத்தம் 1800 பக்கங்கள்**

— ஒவ்வொரு முக்கிய கட்டத்திற்கும் முழுப் பக்கப் படங்களுடன் —

**2 பாகங்களும் சேர்ந்து ப்ளாஸ்டிக் உறையுடன் ரூ. 125.**
**ஸ்ரீராமநவமியை முன்னிட்டு 30-3-1985 முடிய சலுகை விலை ரூ. 110; தபாலில் பெற விரும்புவோர் ரூ. 118 (M.O. அல்லது டிராப்ட்) அனுப்புக.**

குறிப்பு : சலுகை விலையில் பதிப்பகத்தாரிடம் மட்டுமே கிடைக்கும்.)

(1) ஸுந்தர காண்டம் (ஸம்ஸ்க்ருத மூலம்) ரூ. 14. (2) ஸுந்தர காண்டம் (தமிழில் மூலம்) ரூ. 11. (3) கம்ப ராமாயணம் (வசனம்) ரூ. 11. (4) ஸ்ரீராம ஸ்தோத்ரமாலா ரூ. 6. (5) ரகுவம்ச மஹாகாவ்யம் ரூ. 55. தபால் செலவு ப்ரத்யேகம். இலவச முழு விலைப் பட்டியலுக்கு எழுதுக.



**THE LITTLE FLOWER CO.,**
P.B. No. 1028, T. Nagar, Madras-600 017.
போன் : 441538 56-ஆம் ஆண்டு



## நல்லோர்களுக்கு ஏன் உதவ வேண்டும்

நல்லோர்கள், வழிநடக்கும்பொழுது அவர்கள் பாதங்களின் கீழ் மிதிபடும் புல்லுகளுக்கும், இதன்றியும், நடக்கும் பொழுது அவர்களின் நிழல் எவ்வளவு தூரம் பூமியின் மேல் படுகின்றதோ அங்குள்ள புல்லுகளுக்கும் புண்ணியமுண்டாகின்றன. வேதாந்த ரஹஸ்யம் எனவே எங்கள் இனிப்புகள் வாங்கி நல்லோர்களுக்கு வழங்கவும்.

**இனிப்புகள் :** அதிரசம், பொரிவிளங்காய் உருண்டை, தேங்காய் போளி, மங்களூர் போளி, குங்குமப்பூ ஜாங்கிரி, குங்குமப்பூ பாதாம் அல்வா, சோன்பப்டி, ரஸமலாய் முதலியன.

**காரம்:** தட்டை, தேன்குழல், கைமுறுக்கு, சீடை, ரிப்பன் பக்கோடா, மிளகு வடை, ஸ்பெஷல் மிக்ஸர், வாழைக்காய் சிப்ஸ், உருளைக்கிழங்கு சிப்ஸ், வெஜிடபிள் சமோசா முதலியன.

**திருமண விசேஷங்களுக்கு :** சீர் முறுக்கு, திரட்டுப்பால், அதிரசம், பருப்புத் தேங்காய், (பலவகை) முதலியன தயாரித்துத்தருகிறோம்.

# தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை - 600 020
போன் : 412557

காமதேனு கூட்டுறவு சிறப்பங்காடி, தேனாம்பேட்டை, சென்னை-18



## பிரச்னை தீர்ந்தது

போட்டி 46

வாழ்க்கையில் அன்றாடம் ஒவ்வொருவருக்கும் எத்தனையோ பலபிரச்னைகள் உங்களுக்கு ஏற்பட்ட ஒரு சிக்கலான பிரச்னை, அதனை நீங்கள் சமாளித்து வெற்றி கண்ட விதம் பற்றி வெற்றிடத்தில் எழுதி அனுப்பவும். ரசமான அனுபவங்கள் பிரசுரமாகிப் பரிசு பெறும். தவிரக் குலுக்கல் முறையில் ஒருவருக்குப் பட்டுப்புடவை. உறையின்மேல் "பிரச்னை தீர்ந்தது" என்று அவசியம் குறிப்பிடவும். அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்புதல் அவசியம்.

முடிவு தேதி 1.4.85

இன்னும் 7 பட்டுப்புடவைகளே பாக்கி. இந்த ஏழு அதிர்ஷ்டசாலிகள் யாரோ? வாய்ப்பை நழுவ விடாதீர்கள்!

## பட்டுப்புடவை பரிசுத்திட்டம்

என் பெயர் : . . . . . . . . . . . . . .

விலாசம் : . . . . . . . . . . . . . . .

. . . . . . . . . . . . . . .

போட்டு ஜன்னலைத் திறந்து பார்த்ததில் தெருவிளக்கின் அடியில் அவன் படுத்துக் கிடப்பது தெரிந்தது. உள்ளே வந்து படுத்துக் கொண்டாள்.

காலை நாலு மணிக்கு நான் எழுந்து லைட்டைப் போட்டதும் சட்டென்று சொர்ணமும் எழுந்து நின்றாள்.

"என்ன சொர்ணம்... தூங்கலியா...?"

"எப்படி வரும்! வாசல்ல புருஷன் காவல் காத்துக்கிட்டு இருக்கும்பொழுது...?"

"அவனைப் போயி புருஷன்காதீங்க தம்பி. அந்த உறவெல்லாம் என்னிக்கோ விட்டுப் போயாச்சு" என்று சொன்னாள். எவ்வளவு இயல்பாகப் பேச நினைத்தாலும் அதையும் மீறிக் குரலில் சோகம் ஒலித்தது.

அம்மாவிடம் சொல்லி நேற்று இரவே எடுத்து வைத்திருந்த பாலைக் காய்ச்சி, பல் தேய்த்து, காப்பி குடித்துவிட்டு, தலைவாரிக் கொண்டு கிளம்பும்போது, அம்மா என்னிடம்,

"ஜாக்கிரதைடா! அவன் முழிக்கறதுக்கு முன்னாலேயே கிளம்பிடுங்கோ! பஸ் ஸ்டாண்டிலே பஸ்ஸில ஏத்தி அனுப்பின பிறகு நீ வந்தாப் போதும்! முதல் பஸ்ஸில ஏத்தி அனுப்பிடு..." என்றாள்.

சொர்ணம் அம்மாவின் காலைத் தொட்டு நமஸ்கரித்தாள். "நன்னா இரு" என்று மட்டும் சொன்னாள் அம்மா!

சத்தம் கேட்காமல் கதவைத் திறந்த போது வாசலில் நின்ற உருவத்தைப் பார்த்ததும் ஒரு நிமிஷம் பயந்து போயிட்டோம்! அம்மா அவசரப்பட்டு லைட்டைப் போட்டாள். சண்முகத்தாய் நின்றுகொண்டிருந்தாள்.

"நான்தான்மா..." என்றாள்.

"சரி, சீக்கிரம்..." என்றாள் அம்மா!

வெளியில் வந்து பார்த்தபோது அவன் மயக்கத்தில் கிடந்தான்.

ஒரே ஒரு நிமிஷம் நின்று சொர்ணம் அவனைப் பார்துவிட்டு எங்களுடன் வந்தாள்!

பஸ் ஸ்டாண்டை அடையும் வரை மூவரும் ஒன்றும் பேசிக் கொள்ளவில்லை!

மார்கழி மாதக் குளிர் உடலைத் துளைத்தது. சோடியம் வேப்பர் லேம்புகள் இருட்டை விரட்டிக் கொண்டிருந்தன.

பால்காரர்கள் சைக்கிளிலும், தள்ளு வண்டியிலும், விரைந்து கொண்டிருந்தார்கள்.

நிமிஷத்துக்கொரு முறை மூவரில் ஒருத்தர் திரும்பித் தெருவில் எங்காவது அவனின் தலை தென்படுகிறதா என்று பார்த்துவிட்டுத் தொடர்ந்துகொண்டிருந்தோம்!

பஸ் ஸ்டாண்டை நெருங்க நெருங்க பயம் குறைந்து கொண்டே வந்தது!

ஸ்தாபிதம்: 1942 போன்: 2379

"சிறந்த ஆயுர்வேத மருந்துகளுக்கு

# கும்பகோணம், லலிதா பார்மஸி

(ஸ்தாபகர் — Dr. V.R.L. சர்மா)

(D.L. No. — 40)

157, பட்டமங்கலத் தெரு, மயிலாடுதுறை-609 001

தற்போது எமது பார்மஸியின் தலைமையகம் மேற்கண்ட விலாசத்தில் செயல்பட்டு வருகிறது. தங்களுக்குத் தேவையான-எமது தயாரிப்புகளை தபால் மூலமோ, நேரிலோ இவ்விடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். எமது மருந்துகள் யாவும் கீழ்க்கண்ட எமது கிளைகளிலும் கிடைக்கும்.

1. லலிதா பார்மஸி
   39, ரங்கநாதன் தெரு, தியாகராய நகர், சென்னை-600 017 போன்: 441454
2. லலிதா பார்மஸி
   105, கச்சேரி ரோடு, மைலாப்பூர், சென்னை-600 004 போன்: 73007

நேரிலோ தபால் மூலமோ வைத்திய ஆலோசனை பெற விரும்புபவர் எமது டாக்டரின் உதவியாளர் Dr. R. தியாகராஜன் அவர்களுடன் மயிலாடுதுறை விலாசத்துக்கு தொடர்பு கொள்ளக் கோருகிறோம்.

கடிதம் எழுதுவோர் 50 Np தபால்தலை கடிதத்துடன் அனுப்பக் கோருகிறோம். "எழுத்து தெளிவில்லாமலும், பதிலுக்கு 50 Np ஸ்டாம்ப் அனுப்பாமலும் வரும் கடிதங்களுக்கு பதில் எழுதப்பட மாட்டாது."

N.B. லலிதா பார்மஸியின் மருந்துகளும், வைத்திய ஆலோசனையும் இனி கும்பகோணத்திலிருந்து பெற இயலாது.





# ஓர் அரிய வாய்ப்பு

## ஜோதிடம் தபாலில் கற்கலாம்



நம்முடைய முப்பதாண்டுகளுக்கும் மேலான ஜோதிட அநுபவமும் பரம்பரைக் கலைஞானமும், பலருக்கும் பயன்படும் முறையில் தபால் மூலம் ஜோதிடம் கற்பிக்க **டாக்டர் கே. என். சரஸ்வதி B. A, MEd, D, Litt. (Astrological Science) (USA)** அவர்கள் ஓர் எளிய முறையை உருவாக்கியிருக்கிறார்.

இவர் ஜோதிட சக்கரவர்த்தியாக விளங்கிய **பிரம்மஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகளின்** சிஷ்யையும் புதல்வியும் ஆவார்.

மாதம் ஒன்றுக்கு 24 பக்கம் அச்சடித்த பாடங்கள் விதம் 15 மாதங்கள் பாடங்கள் தபால்மூலம் அனுப்பப்பெறும்.

15 மாத முடிவில் **"கடலங்குடி ஜோதிட ஆராய்ச்சி மையம்"** என்ற ஆராய்ச்சி அமைப்பின் சார்பில் சான்றிதழ் வழங்கப்படும்.

**முதல் பாடம் "ஏப்ரல் 85" முதல் வாரம் அனுப்பப்படும்.**

**அட்மிஷன் பாரங்களுக்கு ரூ. 2/50 M.O. செய்யவும்**

தொடர்பு கொள்ளவேண்டிய முகவரி

KADALANGUDI ASTROLOGICAL RESEARCH CENTRE
38, Natesa Iyer Street, T. Nagar, Madras - 600 017

# ப.உ.ச.வுக்கு ஏன் மந்திரி பதவி இல்லை?

* டி. வி. தங்கவேலு, துடுப்பதி.

? காலையில் எழுந்தவுடன் நீங்கள் பருகுவது காப்பியா, டீயா?

! அதிகாலை நேரத்தில் காப்பி கிரைண்டர் எழுப்பும் இனிய கீதத்துக்கு இணையான சுப்ரபாத இசை வேறு எது உண்டு! மேலும் சூடாக அதில் வெந்நீர் விடப்பட்டதும் ஃபில்டரிலிருந்து கம்மென்று எழும் மணம் வேறு இரு அறைகளைக் கடந்து நான் வேலை தொடங்கியுள்ள மேஜையை நெருங்கி நாசிகளை எட்டும்போது ஏற்படுகிற சுகானுபவம்... ஆகா! ஒரு எதிர்பார்ப்பைக் கிளர்ந்தெழச் செய்கிற இனிய வாசனை... அடுத்து மனைவி காப்பிக் கலந்து எடுத்து வர, முதலில் இலேசாக மோப்பம் பிடித்து, பிறகு நிதானமாக உறிஞ்சும் போது... த்சொ... த்சொ... டீயைப் பற்றிக் காலைநேரத்தில் நினைக்கவும் தோன்றுமா!

* எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? பட்டை நாமம் என்றதும் உங்களுக்குத் தற்போது யார் நெற்றி நினைவுக்கு வருகிறது?

! பட்டை நாமமோ, பொட்டைத் தலையோ, பட்டை விபூதியோ எப்படி வேணுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள்... ஏமாந்த சோணகிரி என்ற அர்த்தத்தில் பார்த்தால் எனக்கு எப்போதுமே ஸ்ரீமான் வாக்காளர் நினைவு தான் வரும்!

* எஸ். ராம கோபால், சென்னை—33.

? வெள்ளிவிழா ஓவியர் ஜெயராஜ் ஓவியங்களை ஏன் கல்கியில் வெளியிட மாட்டேன் என்கிறீர்கள்? இருவருக்கும் பிடிக்காதோ?

! வெள்ளி விழா ஓவியர் ஜெயராஜை வெள்ளி விழாக் காலமாகப் பயன்படுத்திக் கொண்டு வருகிறது கல்கி. ஒருவேளை நீங்கள் கவனிக்காததற்குக் காரணம் நீங்கள் எதிர்பார்க்கிற 'ஜெயராஜ் பாணி' கல்கியில் காணப்படாததாய் இருக்கலாம். அநேகமாய் வாரம் தவறாமல் அவர் கல்கியில் வரையும் ஓவியங்கள் அவருக்கு மனநிறைவையும் எங்களுக்கு மகிழ்ச்சியையும் வாசகர்களுக்குத் திருப்தியையும் அளிப்பன. — எஸ். ராமகோபால் நீங்கலாக! இன்னும் பொன் விழாக் காலத்துக்கும் அதற்கு அப்புறமும் கூட அவர் பணி சிறக்க வாழ்த்துவோம்.





அமைச்சரில்லை

● வெள்ளிவிழா

* எம். கே. வேங்கடராமன், சென்னை—35

? தமிழ்ப் படம் டீ.வியில் திரையிடப்படும் போது அங்கு கூடியிருக்கும் பெரும்பாலான இளைஞர்கள் பிளேட், அறுவை, மசாலா, படுபோர் என்ற வார்த்தைகளைப் பிரயோகித்து விமர்சிக்கிறார்களே?



● நிஜலிலாந்து



● தோல்விக்கு

! பிளேட், அறுவை என்று விமர்சனம் செய்து கொண்டே அந்தப் படங்களைப் பார்க்கிறார்களே, ஏன்? 'நன்மையில்லாத படங்களைப் பார்க்க மாட்டேன்' என்று உறுதியாக இருந்து வேறு பயனுள்ள விதத்தில் அந்த நேரத்தைச் செலவிடலாம் அல்லவா? அதை அனுமதிக்காத வண்ணம் டீவி- வாலிபர், வயோதிகர், குழந்தைகள் என அனைவரையும் கட்டிப் போடுகிறது. இது தான் டீவியில் உள்ள மிகப் பெரிய ஆபத்து.

* கவிகண்ணன், போடிநாயக்கனூர்.

? அரசியல்வாதிக்கும் போலிச் சாமியாருக்கும் என்ன வித்தியாசம்?

! இருவருமே உத்தமன் போல நடிக்கிறார்கள்; இருவருக்குமே வேஷத்துக்கு ஏற்ப உடை தேவைப்படுகிறது; இருவருமே ரகசியமாய்ச் செல்வம் சுருட்டக் கூடியவர்கள், சிற்றின்பத்தில் ஈடுபடக் கூடியவர்கள்... ஆக, என்ன வித்தியாசம்...? ஆ! அரசியல்வாதிக்கு விபூதிச் செலவு மிச்சம்!

* ஆர். சுப்பாராவ், திருக்கோயிலூர்.

? இந்திரா காந்தி கொலை வழக்கில் கொலையாளிக்கு ஆதரவாக ஆடு, சொரணை துறந்து சட்டம் பேச வந்திருக்கிறாரே வக்கீல் லேகி, ஏன்?



வழி



வாதக்காரர்கள்

! எப்பேர்ப்பட்ட கொடிய குற்றம் செய்த எந்தக் குற்றவாளியானாலும் சரி, அவன் தரப்பு வாதத்தை எடுத்துச் சொல்ல வாய்ப்புத் தர வேண்டும் என்று தர்மம், நீதி, சட்டம் எல்லாமே வலியுறுத்துகின்றன. இதில் அரசியல் நோக்கின்றிப் பார்த்தால் சூடு, சொரணை இருப்பதாலேயே அந்த வழக்கறிஞர் அப்படி முன் வந்தார் எனக் காண்போம். இல்லையெனில் மற்ற பலரைப் போல் அவரும் 'நமக்கேன் வம்பு' என்று ஒதுங்கிவிடலாம். யார் கண்டது? வாதங்கள், விசாரணைகளின் போது இச்சதித்திட்டம் குறித்து இதுவரை தெரிய வராத பல புதிய விவரங்கள் அம்பலமாகலாம்.

*** குடந்தை ஆர். ஆனந்த், கும்பகோணம்.**
**? ஸாடிலைட் வசதி இருந்தும் உலகக் கோப்பை கிரிக்கெட் பந்தயத்தை டீவியில் உடனுக்குடன் ஒளி பரப்புவதில்லையே?**

! செய்தார்களே! ஆஸ்திரேலியாவை வென்றதையும் நியூஸிலாந்துக்குத் தண்ணி காட்டியதையும் உடனுக்குடன் பார்த்ததுடன் மறுபடி இரவில் ஹைலைட்ஸில் வேறு பார்த்து மெய் சிலிர்த்தோமே! இந்தியாவின் ஆட்டத் திறனுக்கு இணையாக ஒன்றைச் சொல்லலாமென்றால் அது ஆஸ்திரேலிய டீவியின் ஒளிபரப்புத் திறமை. 'ஸீகல்' பறவைகள் உள்பட அனைத்தையும் எத்தனை அழகாகப் படம் பிடித்துக் காட்டினார்கள்! ஞாயிற்றுக்கிழமைக்காகத் திக்திக்குடன் காத்திருக்கிறோம்.

*** பத்மினி சுரேஷ், கோவை.**
**? ஒவ்வொரு முறையும் கரெண்ட் பில் பார்க்கும் போது எப்படியிருக்கும்?**

! பில் தருகிற ஷாக் ஒருபுறம் இருக்க, ஸ்பாட் பில்லிங் அறிமுகமான பிறகு நமது டெபாஸிட்டுக்கு வட்டி கழித்துப் பில் போடுகிற பழக்கத்தை வாரியம் அடியோடு கைவிட்டு விட்டதே. அந்த வட்டியை என்று, எப்படிப் பெறுவது என்ற யோசனையும் பலமாய் எழும். தனி நபருக்குச் சேர வேண்டிய வட்டி குறைவாக இருக்கலாம். ஆனால் ஒட்டு மொத்தமாய்ப் பார்த்தால் மின்வாரியத்துக்கு ஆதாயம் அதிகம். எளியோருக்கு வாரியம் கருணை காட்டினால் நலம். இதை யாராவது கவனித்து ஆவன செய்வார்களா என்று ஏங்குகிறேன்.

*** எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.**
**? ப.உ. சண்முகத்திற்கு மட்டும் ஏன் மந்திரி பதவி தரப்படவில்லை?**

! 'அவர் செல்வாக்கெல்லாம் எம். ஜி. ஆர். அமெரிக்காவில் இருந்த போதுதான்; இரண்டு பேருக்கும் அவ்வளவாக ஒத்துப் போகாது; முதல்வர் ஏதோ சகித்துக் கொண்டு போகிறார்' என்று சொன்னால் தராசு கிசுகிசுவில் இறங்கி ஆதாரமற்ற வதந்திகளைப் பரப்புவதாகப் பழி சுமத்தப்படும். ஆனால் அ. தி. மு. க. வட்டாரத்திலேயே அப்படித்தான் பேசிக் கொள்கிறார்கள். நான் என்ன செய்ய?

*** இரா. சுவாமி நாதன், சீர்காழி.**
**? கோடை காலத்தில் பருகச் சிறந்தது 1) இளநீர், 2) மோர், 3) சர்பத் — உங்கள் சிபாரிசு?**

! இளநீர் — கட்டுப்படியாகாது; சர்பத்தில் முக்கால் வாசிக்குமேல் செயற்கை. ஆகையால் அன்பர்களே நீரானாலும் மோரே சிறப்பு! அதுவும் நீர் மோரில் சிறிது பெருங்காயம், இஞ்சி தட்டிப் போட்டு இலேசாகத் தாளித்துக் கொட்டி, கருவேப்பிலை இரண்டு மிதக்கவிட்டு ஜில்படுத்திவிட்டால்... எத்தனைக் கடுங்கோடையானாலும் சமாளிக்கிற ஆற்றல் வந்துவிடாதா?

*** வி. அனந்தராம அய்யர், நாகப்பட்டினம்.**
**? சாஸ்திரீய சங்கீதம் பயின்று மேடை ஏறும் இளம் வித்வான்கள் அந்தக் கலைக்குப் பொருத்தமின்றி நடை, உடை, மீசை, கிராப் வைத்துக் கொள்கிறார்களே? நல்வழிப் படுத்துவது எப்படி?**

! நல்லவேளை உமக்கு வயது எழுபது என்று குறிப்பிட்டிருப்பதால் சும்மா விட்டுவிடுகிறோம். வித்வானின் தோற்றத்துக்கும், அவரது இசைத் திறனுக்கும் எதற்காக முடிச்சுப் போட வேண்டும் சுவாமி!

*** காஞ்சனா சுப்பராயலு, கடலூர்.**
**? ரோஜாவை தலையில் சூடுவது, இறைவனுக்குச் சமர்ப்பிப்பது, செடியிலேயே விட்டுவைப்பது எதை விரும்புவீர்கள்?**

! நீங்கள் வரிசையைத் தலைகீழாக மாற்றினால் அதுதான் எனக்குச் சம்மதம்.

*** ரூ. 10 பரிசு பெறுபவர்:**
**எம். கே. வெங்கடராமன்,**
**19, 5வது தெரு,**
**நந்தனம் எக்ஸ்டென்ஷன்,**
**சென்னை 600 035.**

## நீங்கள் கேட்டவை

**— தராசு**



# வெற்றி - சேவை - வெற்றி

ஆங்கிலேயர் நம்மை ஆண்டு கொண்டிருந்த அந்த நாளில் சுதேசி இயக்கம் என்பதாக ஆரம்பித்தார் மகாத்மா. அயல் நாட்டுப் பொருள்கள் மீதுள்ள மோகத்தை ஒழித்துச் சுய சார்புடன் நிற்க வேண்டும் என்றார். இதன் அடிப்படை நோக்கம் நாட்டு மக்களிடம் அந்நியர் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறும் உத்வேகத்தைத் தூண்டுவது மட்டுமல்ல; நம்மை ஆண்டவர்களின் வியாபார நோக்கில் மண்ணை அள்ளிப் போடுவது மட்டுமல்ல; நாளை இந்தியா சுதந்திரம் பெறும்போது அது வெறும் அரசியல் சுதந்திரமாக மட்டும் இருந்துவிடக்கூடாது; பொருளாதார ரீதியிலும் நாடு சுதந்திரமாக விளங்க வேண்டும் என்று தீர்க்க தரிசனத்துடன் செயல்பட்டார் மகாத்மா.

இந்தச் சுதேசி இயக்கத்தில் அளாவலால் உருவானதுதான் பாங்க் ஆஃப் தமிழ்நாடு. எண்பது ஆண்டுகளுக்கு முன்பாக வங்கித் தொழில் என்பதாக இங்கு பிரமாதமாக எதுவும் கிடையாது. லேவாதேவி என்ற அளவில் சில நாணயக் கடைகள்தாம் உண்டு. மற்றபடி ஸ்டேட்பாங்க் எனப்பட்ட மாகாண வங்கிகள் அரசாங்கத்துக்கான முழு வங்கிகளாகவே செயல்பட்டன. இந்தச் சமயத்தில் தேசிய உணர்வுடனும், சுதேசி உணர்வுடனும் தொடங்கப்பட்ட வங்கி பாங்க் ஆஃப் தமிழ்நாடு. சுதேசி உணர்வுடன் அவர்கள் எம்.டி.டி. ஹிந்து கல்லூரி விரிவாக்கத்துக்கு உதவினார்கள்; வ.உ.சிதம்பரம்பிள்ளையின் சுதேசிக் கப்பல் கம்பெனிக்கு உதவினார்கள்; பாரதியாரின் நூல்களைப் பரலி. சு. நெல்லையப்பர் வெளியிட உதவினார்கள்.

இப்படி லட்சிய நோக்குடன் ஆரம்பமாகிப் படிப்படியாக வளர்ந்த வங்கி எண்பது ஆண்டுகளுக்குப் பிறகு இன்று ஆலமரமாகத் தழைத்திருக்கிறது. அதன் வளர்ச்சி சில காலக் கட்டங்களில் பிரமிக்க வைப்பதாக உள்ளது. 1978–82 நாலே ஆண்டுகளில் 16 கோடியாக இருந்த டெபாசிட் தொகை 56 கோடியாக உயர்ந்தது. அதே 82–ஆம் ஆண்டில்தான் திரு. வி. எஸ். வி. மணி இந்த வங்கியின் சேர்மனாகப் பொறுப்பேற்றார். ஒரு 'வி' இருந்தாலே 'விக்டரி' என்பர். இவருக்கோ இரட்டை 'வி' இனிஷியல்கள். இரட்டை வெற்றிக்கு இடையிலுள்ள 'எஸ்', 'ஸர்விஸ்' என்பதைக் குறிப்பதாகக் கொள்ளலாம். ஒரு பாங்கின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருப்பது அதன் சேவை மனப்பான்மை என்பதைப் புரிந்து கொண்டு செயலாற்றியதால் பாங்க் ஆஃப் தமிழ்நாடு மேலும் துரிதமாக வளர்ந்தது. 81–ல் 'பி' வகுப்பு ஊதியம் பெற்று வந்த பாங்கு ஊழியர்கள் இரண்டே ஆண்டில் 'ஏ' வகுப்பு ஊதியம் பெற ஆரம்பித்தனர்.

வங்கியின் எண்பதாவது ஆண்டு விழாவைச் சிறப்பாக நடத்திக் கொடுக்கும் பெருமை வி. எஸ். வி. மணி அவர்களுக்குக் கிடைத்தது. விழாவுக்கு இன்றைய துணை ஜனாதிபதியாக விளங்கும் ஆர். வி. வந்திருந்தார். விழா மலரில் தரப்பட்டிருந்த டெபாசிட் விவரம், கடன் விவரங்களைப்

திருவாளர்கள் ம. பொ. சி, வி. எஸ். வி. மணி, சேவல்சந்த் . . . ஆர். ஏ. நீலகண்டன்



## அடுத்த வாரம்

# போதை பழகும் பேதைகள்

* உங்கள் மகன் அல்லது மகள் போதை மருந்துக்கு அடிமையா?
* அதை நீங்கள் அறியாமலே இருக்கலாம்! எப்படிக் கண்டுபிடிப்பது?
* அடிமையாகாதிருக்க என்ன முன்னெச்சரிக்கை நடவடிக்கை தேவை?
* அடிமைப்பட்டவர்களை எவ்வாறு மீட்பது?

# மனம் திறந்து பேசுகிறார் டாக்டர்

---

பார்த்தார். நிதி அமைச்சராய் இருந்தவரல்லவா? அவருக்கு இது போதவில்லை. 'பாலன்ஸ் ஷீட்' கேட்டார். அதை இப்படியும் அப்படியும் புரட்டிப் பார்த்தார். பிறகு பேச எழுந்த போது அவர் தெரிவித்த முதல் கருத்து: "ரிஸர்வ் பாங்கின் எல்லாச் சோதனைகளையும் இந்த வங்கி சுலபத்தில் ஜெயிக்கும்!" வசிஷ்டர் வாயால் பிரும்மரிஷி என்ற பட்டம் வி. எஸ். வி. மணி அவர்களுக்குக் கிடைத்துவிட்டது!

திரு. மணி அவர்கள் பாங்க் ஆஃப் தமிழ்நாடு சேர்மன் பதவியிலிருந்து ஓய்வு பெறுவதால் அவருக்குப் பிரிவுபசாரம் செய்கிற முறையிலும் அவருக்குப் பதில் புதிதாகப் பொறுப்பேற்கிற திரு. நீலகண்டன் அவர்களை வரவேற்கும் முகமாகவும் ஒரு விழா அண்மையில் நடைபெற்றது.

பிரதம விருந்தினராகக் கலந்து கொண்ட திரு. ம.பொ.சி. அவர்கள் ஒரு பொருளாதாரச் சொற்பொழிவே நிகழ்த்தி விட்டார். எதையும் எளிய தமிழில் இலகுவாய்ப் புரியும்படிச் சொல்லமுடியும் என்பதற்கு திரு. ம.பொ.சி. அவர்களுடைய அன்றைய பொருளாதாரச் சொற்பொழிவு சான்று.

திரு. மணி அவர்கள் மாணவர் தலைவராய் இருந்த கால கட்டத்திலேயே சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டவர். எனவே வேறு பல பாங்குகளில் உயர் பதவிகளில் இருந்ததைக் காட்டிலும் பாங்க் ஆஃப் தமிழ்நாடு வங்கியில் சேர்மனாக இருந்த காலகட்டம் அவருக்கு மிகுந்த மனத்திருப்தி அளிப்பதாய் இருந்திருக்கும். திருநெல்வேலியில், "சங்கர ரமண கேந்திரா" என்ற கல்வி நிறுவனம் ஒன்றை நடத்தி வரும் அவர், ரமணரிடமும் காஞ்சி முனிவரிடமும் அளப்பரிய பக்தி கொண்டவர். ஓய்வுபெற்ற பிறகு காஞ்சிப் பெரியவரின் பல ஆக்கப்பூர்வமான திட்டங்களில் பங்கேற்க அவருக்கு அதிக நேரம் கிடைக்கும். நேரம் நல்ல நேரமாகச் செலவாகும்.

எளிமையான தோற்றமும் மிருதுவான பேச்சுச் சுபாவமும் கொண்ட மணி அவர்கள், கடுமையானவரில்லை என்றாலும் கண்டிப்பானவர். அன்பினால் வசியப்படுத்தி ஊழியரிடம் வேலை வாங்குவார். ஆனால் கடமை தவறுகிறவரிடம் கருணை காட்டமாட்டார். அன்பையும் பண்பையும் ஒருங்கே தம்மிடம் பணியாற்றுவோரிடமிருந்து பெறும் ஆற்றல் அவருக்கிருந்தது.

புதிதாகப் பதவி ஏற்கும் திரு. நீலகண்டன், ரிஸர்வ் பாங்கில், பாங்குகளின் வளர்ச்சிப் பிரிவிலேயே பணியாற்றி, நிறைந்த அனுபவம் பெற்றிருப்பதால் அவர் தலைமையில் பாங்க் ஆஃப் தமிழ்நாடு மேலும் வளர்ச்சியுற்றுப் பல வெற்றிகளைக் காணும் என எதிர்பார்க்கலாம். நீலகண்டன் அவர்களின் பதவிக்காலம் இந்த வங்கிக்கும் தமிழகத்துக்கும் கூட ஒரு பொற்காலமாகத் திகழட்டும்.

ஏ. ராஜேந்திரன்

# கின்னஸ் புத்தகத்திற்குச் சில சிபாரிசுகள்




## கி. ராஜேந்திரன்

உலகிலேயே மிக அதிகமாகக் கடன் பட்டவர் என்ற முறையில் ஓர் இந்தியர் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறப் போகிறார்.

இருபத்து நாலு மணி நேரம் இடைவிடாமல் (அனுமதிக்கப்பட்ட ஓய்வு தவிர) குச்சிப்புடி நடனமாடிய ஹைதராபாத்தைச் சேர்ந்த சரளா குமாரியும் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறுவார்.

இவையெல்லாம் பெரிய சாதனைகள்தாம். ஆனால் இவற்றை விடவும் முக்கியமான, செயற்கரிய செயல்கள் புரிந்த பலரைக் கின்னஸ் புத்தகப் பதிப்பாளர்கள் கவனிக்காமல் விட்டுவிடுகிறார்கள் என்றே எனக்குத் தோன்றுகிறது. எனவே இதோ என்னுடைய சிபாரிசுகள்:

* தமிழக அமைச்சரவையை விடப் பெரிய அமைச்சரவை, திறமை மிக்க அமைச்சரவை அல்லது திறமையற்ற அமைச்சரவை உலகில் இருக்கலாம். ஆனால் முதல்வரை எண்சாண் கிடையாக விழுந்து விழுந்து கும்பிடுகிற அமைச்சர்கள்; அவர் பாதங்களைத் தொட்டுத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொள்கிற அமைச்சர்கள் உலகில் வேறு எந்த அமைச்சரவையிலும் காண முடியாது என்பதால் தமிழக அமைச்சரவை இந்தத் தனித் தன்மைக்காகவே கின்னஸ் புத்தகத்தில் குறிப்பிடப் பெறலாம். மிக அதிகமான தடவை விழுந்து கும்பிட்ட அமைச்சரின் படமும் சாதனையும் சிறப்பிடம் தந்து கௌரவிக்கப்படலாம்.

* அப்புறம் மின்வெட்டை எடுத்துக் கொள்ளுங்கள். மின்சாரப் பற்றாக்குறை வேறு நாடுகளில் இருக்கலாம். இங்கு நிலவுவது போன்ற மின்வெட்டு அந்நாடுகளில் இருக்கலாம். ஆனால் எந்தச் சமயத்தில் மின்வெட்டு என்ற முன் அறிவிப்பு இன்றித் திடீரென்றும் திடுதிப்பென்றும் லோட் ஷெட்டிங் அது இது என்று கூறிக் கொண்டு மின் சப்ளை இல்லாமல் செய்வதில் நமது மின்வாரியத்துக்கு இணையாக உலகில் வேறு எங்குமே காண முடியாது. எனவே நமது மின்வாரியத்தின் சாதனை விவரமும் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் பெயரும் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறலாம்.

* கடன் வாங்கினால் வட்டி கொடுப்பது சகஜம். ஆனால் நமது ரயில்வே ஒன்றுதான் கடன் பெறாமலேயே உலக வங்கிக்கு அபராதம் செலுத்திக் கொண்டிருக்கிறது! அதாவது, 'வழங்கப்பட்ட கடன் வசதியைப் பயன்படுத்திக் கொள்ளாமல் இருந்தால் அதற்கு அபராதம் செலுத்த வேண்டும்' என்ற நிபந்தனையில் கையெழுத்துப் போட்டதன் விளைவாக நமது ரயில்வே நாளொன்றுக்கு 70,000 ரூபாய் மக்களின் வரிப் பணத்தை அபராதமாக உலக வங்கிக்குக் கொடுத்து வருகிறது! இப்படிக் கடனையும் பெறாமல்— பயன்படுத்திக் கொள்ளாமல்— அபராதமும் செலுத்திக் கொண்டிருக்கும் உலக மகா அதிசயம் வேறு எங்கு காண முடியும்! இத்தகைய அரியதொரு ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட உயர் அதிகாரி அந்தச் சாதனைக்காகவே கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற வேண்டியவர்தாமே!

* அகில இந்திய ரேடியோவை அலசினால் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறக் கூடிய பலர் அகப்படுவார்கள். என்றாலும் பிப்ரவரி 28-ம் தேதி எழுபது நிமிடங்களை நீடித்த லால்குடி ஸ்ரீமதி பிரும்மானந்தம் வயலின் கச்சேரியின் போது நாலு முறை தடங்கலுக்கு வருந்திய ஒலிபரப்பாளரைவிடப் பெருஞ் சாதனையாளரைக் காண்பது அரிது. எனவே அவரை நிச்சயம் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறச் செய்ய வேண்டியதுதான்.

* ஒரே அடியில் ஏழு ஈக்களைக் கொன்ற சாதனையாளரைப் பற்றிய கதை சிறுவயதில் பாட்டி கூற நாம் கேட்டிருக்கிறோம். ஆனால் பஸ்ஸை நடைபாதை மீது ஏற்றி, ஒரே சமயத்தில் மூன்று மானிடரைத் தீர்த்துக் கட்டிய



ஓட்டுனரைப் பற்றிச் சமீபத்தில்தான் கண்ணுக்கு மெய்யாகப் படிக்கிறோம். இந்த மாவீரரும், அவர் செலுத்திய பல்லவன் பேருந்தும் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறத் தகுதியுடையவர்களாகிறார்கள்.

* நமது வங்கிகளை எடுத்துக் கொள்ளுங்கள். வங்கி வேலை என்றால் பாதுகாப்பு மிகுதி என்று கருதப்பட்ட காலம் ஒன்று இருந்தது. இன்றோ கொலை, கொள்ளையும் அதிகாரிகள் மீது ஆஸிட் பல்ப் வீசுவதும் வங்கிகளில் சகஜமாகிவிட்டது. இவையெல்லாம் வங்கிகளைப் பொறுத்தமட்டில் உலகின் வேறு பல நாடுகளிலும் நடக்கக் கூடியவைதாம். ஆனால் வங்கியில் பணம் போட்டவர், தம்முடைய பணத்தில் ஒரு பகுதியைத் திரும்பப் பெறுவதற்காகத் தவம் இருக்க வேண்டியிருக்கிறதே, அதை நாநிலத்தில் வேறெங்கும் காண முடியாது. மிக அதிகமான நேரம் கையைப் பிசைந்து கொண்டு கஸ்டமர் காத்திருக்குமாறு செய்தவர் என்று தேடினால் அரசுடைமையான நமது வங்கிகளில் பலபேர் அந்தப் பெருமைக்குப் போட்டியிடுவார்கள். அவர்களில் மிகச் சிறந்த சாதனையாளரைத் தேர்ந்தெடுத்துக் கின்னஸ் புத்தகத்தில் சேர்க்கலாம்.

* லஞ்ச ஊழலை ஒழித்துக் கட்டுவேன்; இதோ ஒழித்துக் கட்டிக் கொண்டிருக்கிறேன் என்று வாய் ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கிறார் பாவம், நமது பிரதமர். எனவே அவருக்குத் தர்ம சங்கடத்தை ஏற்படுத்த விரும்பாத மந்திரிசபைக் காரியதரிசி திருகால் ஒரு காரியம் செய்தார். செண்ட்ரல் பாங்கிலிருந்து பத்து லட்சம் கடன் வாங்கி ஏழு படுக்கை அறைகள் கொண்ட மாளிகை கட்டினார். மாதம் 12000 ரூபாய் வீதம் கடனை வட்டியுடன் திருப்பித் தருவதாக வங்கி நிர்வாகத்திடம் கூறினார். அப்புறம் அந்த வங்கியையே அந்த வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டு தமக்கு மாதம் 14,000 ரூபாய் வாடகை தரும்படி சொன்னார்! வங்கியும் வேறு வழியின்றி ஒப்புக் கொண்டது. திருகாலுக்கு மாதம் ரூ. 2000, கூலியாக லாபம். தவிர சல்லிக்காசு செலவின்றி ஒரு மாளிகை! அந்த மாளிகையில் வங்கி ஒரு கிளை திறந்தது. அந்த வட்டாரத்தில் இருந்தவை மூன்றே வீடுகள்! மந்திரிசபைக் காரியதரிசியின் மாதச் சம்பளம் ரூ. 6000. அவர் வங்கிக்குத் திருப்பித் தர வேண்டிய கடன் தவணை மாதம் ரூ. 12,000! எவ்வளவு சாமர்த்தியம் பார்த்தீர்களா? சட்டபூர்வமாகப் பார்த்தால் எல்லாம் சரி. தப்பு ஏதும் நடக்கவில்லை. எனவே லஞ்சம் என்ற நாமதேயத்துக்கே இடமின்றி லஞ்சம் பெறுகிற கலையில் திருகால் ஈடு இணையற்றவராய் விளங்கி, நம்மை மூக்கின்மேல் விரல் வைத்து வியக்கும்படி செய்கிறார். இத்தகைய ஒரு அதிமேதாவிச் சாதனையாளர் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற்றே தீர வேண்டும் அல்லவா!

* உலகில் சர்வாதிகாரிகள் உண்டு, கொடுங்



கோலர்களும் உண்டு. ஆனால் ஜெயவர்த்தனவை விடவும் சிறந்த ஒரு ஜனநாயகக் கொடுங்கோலரை எங்கேனும் பார்க்க முடியுமா? ஈழத் தமிழர்களுக்காகப் பரிதாபப்பட்டுக் கண்ணீர்விட்டுக் கலங்கிக் கொண்டே அவர்களில் அப்பாவிகளான பல நூறு பேர் கொன்று குவிக்கப்படுவதைப் பார்த்துக் கொண்டிருக்கும் ஆற்றல் வேறு யாருக்கு உண்டு! பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழன் என்று செயல்படும் ஜெயவர்த்தனதான் ஜனநாயகக் கொடுங்கோலர் என்ற சிறப்புப் பட்டத்துக்கு ஏற்புடையவராகி அதன் காரணமாகக் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறவும் தகுதி உடையவராகிறார்.

* யூனியன் கார்பைட் சர்வதேச நிறுவனத்தின் தலைவர் எதற்காகக் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற வேண்டும் என்று நான் சொல்லித்தான் தெரிய வேண்டுமென்பதில்லை.

* சாதனையாளர்கள் தான் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறலாம் என்றால் மேலே விவரித்தவர்கள் எல்லோரும் மாபெரும் சாதனையாளர்களே. இன்னும் வேறு பலரையும் கின்னஸ் புத்தகத்துக்குச் சிபாரிசு செய்ய முடியும். ஆனால் கின்னஸ் புத்தகத்துக்கு மிக அதிகமான நபர்களைச் சிபாரிசு செய்தவன் என்ற முறையில் என்னையும் கின்னஸ் புத்தகத்தில் சேர்த்துக் கொள்ளும்படி இருக்கும். அப்படி ஒரு சிரமத்தைக் கின்னஸ் புத்தகத் தயாரிப்பாளருக்குத் தரவேண்டாம் என்பதால் இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன்!

**மேலட்டை: செல்வி சுஜீதா**

**வண்ணப்படம்: ரூசி**



வெள்ளித்திரை

# புதுயுகம்

'டிஷ்யூங்' என்று ஒரு துப்பாக்கிசூடு; மோட்டார் சைக்கிள் ஸ்டண்ட்; என்று நல்ல ஆரம்பம்தான்.

அதில் பாருங்கள். கதையம்சம், கதையம்சம் என்று புலம்புகிறார்களே என்பதற்காக — நேர்மையான வக்கீல், அவரை அழிக்கப் பார்க்கும் வில்லன், வக்கீலுக்கு ஒரு அக்கா, அக்காவின் சூப்பரின்டெண்ட் கணவர் (போலீஸ்), நாயகனுக்கு ஒரு நண்பன், கடத்தல் கூட்டத்து அனுராதா, ஆட்டம், பாட்டம், கோமாளி ஜெயிலர் சந்திரசேகர் (டைரக்டர் சந்திரசேகர்) வக்கீல் மனைவி (காதல், டூயட், கிளுகிளு) கல்யாணம், பிள்ளையாண்டல், வளைகாப்பு, வளையல்காரக் கணவன் — தாங்காதுடா சாமி.

இத்தனையுமா நினைவில் வைத்துக் கொள்ள முடியும்?

சிவகுமாரா — இந்த மாதிரி ஒரு ரோலுக்காகவா? ம், போகட்டும். குறிப்பிட்டுச் சொல்லுகிறமாதிரி எதுவும் இல்லை. ஸாரி.

பூவே பொன்னே பாட்டில் வெள்ளி ஜிகினா சரிகையுடன் அந்தக் கறுப்புப் புடவை அணிந்து [illegible]. எங்கே தேடிப் பிடித்தார்களோ? விஜி இந்த மாதிரி விதவிதமாய்ப் புடவை கட்டி, ஆடி, பாடி, கண்ணீர் சிந்தி — போதாதா?

ஒய். ஜி. மகேந்திரன், மூர்த்தி, சங்கிலி முருகன் — எதிர் முகாம் காரர்கள். வில்லன்களாம். மூன்று பலி ஆடுகளை நிற்க வைத்த மாதிரி இருக்கிறதே தவிரப் பயப்படுகிறமாதிரி இல்லை.

ஒய். ஜி. எம்., மூர்த்தி, வனிதா கூத்தில் மகேந்திரன் வனிதாவிடம் (சி.ஐ.டி. ஆபீஸராம், கன்னுராவி) பூசை வாங்கி கிழிந்த சட்டையுடன் வெளியே வந்தவுடன், 'எங்கிட்டேயும் இதே டிசைன்ல ஒரு சட்டை இருக்குதே' என்று மூர்த்தி சொல்கிறார் — நாம் சிரிக்கிறோம். அப்புறம் சிரிப்புக்குப் பஞ்சம்தான். சின்னப் பையன்கள் எல்லாம் ஐந்து பைசா ரேட் போட்டு வசூலித்துக் காண்பிக்கிற டிராமா மாதிரியான ஒரு கூத்து அவர்களுடையது.

கல்யாண்குமார் டீஸெண்டாகப் பண்ணியிருக்கிறார். கே. ஆர். விஜயாவிற்கு வேலையே இல்லை. அதனால் அவரும் ஒப்புக்கு இருந்துவிட்டுப்போகிறார்.

நண்பனாகப் போன விஜயகாந்த் கொலைகாரனாக அறிமுகமாவது ஒரு அதிர்ச்சி வைத்தியம்.

அதுசரி, சாலையில் போகிற பெண்ணை இழுத்து அதே சாலை ஓரத்தில் கற்பழிக்க முயற்சியாம். பெண்ணின் தந்தை கொல்வாராம். ஜெயிலர் சந்திரசேகர் நடுவில் பார்த்துக் கொண்டிருந்துவிட்டுப் பெண்ணையும் அப்பாவையும் வழியனுப்புவாராம். கிண்டலுக்காகப் பண்ணியிருக்கிறாரா? ஸீரியஸ்ஸாகவே செய்திருக்கிறாரா? என்ன சார் இது?

விஜி வலியில் துடிப்பதும், சிவகுமார் கார் ஹாரனை எழுப்புவதும், வில்லன்கள் வேட்டை நாய்களாய் அலைவதும் —

பத்து நிமிஷத்திற்குப் பரபரப்புதான். அதோடு சரி.





# கொலுசு



ஒரு சமூகத் துரோகி. அவனைத் தெய்வம் எனக் கொண்டாடும் வேலைக்காரன். அவன் மனைவி. சமூகத் துரோகி, வேலைக்காரன் மனைவியைப் பெண்டாளத் துடிப்பதுதான் கதையின் மையம்.

வெகு சாதாரணமான ஒரு கரு. அசாதாரணமான திரைக்கதை. அதனால் படம் ஓஹோஹோ என்று மாறிவிட்ட ஒரு கோலம். செதுக்கி வைத்தாற்போலப் பாத்திரங்கள்.

'நீ களவாணி, கண்ணைத் தொறந்து பார்த்துடுவே'யிலும் சரி, ஒரு பக்கம் கண்ணீர், ஒரு பக்கம் நாணப் புன்னகை என்று 'ஜோவமென்ன ராசாவுக்கு' பாடலில் ஜமாய்ப்பதிலும் சரி — சரிதா பிய்த்து உதறுகிறார்.

முரட்டு அப்பாவி ராஜேஷ், மலேஷியா வாசுதேவனிடம் 'ஐயா' என்று கெஞ்சி, 'ஐயா' என்று மிஞ்சி, 'மலையப்பா' என்று அதட்டுகிறாரே — அமர்க்களம். அப்புறம் அந்த வெகு ஆக்ரோஷமான சண்டை. பரிதாபமான முடிவு. இயற்கை. வெகு இயற்கை.

மலேஷியா வாசுதேவன் = புடம் போட்ட தங்கம். ஜெனரல் டயரின் ஜாலியன் வாலாபாக் மாதிரி அந்தக் கிராமத்தைச் சூறையாடி இப்படி ஒரு இடி அமீன் கொலைகாரனு' என்று மூக்கில் விரலை வைக்க வைக்கிறார்.

சரிதா கொலுசு ஒலிக்க ஆவியாய் வருவதாக நினைத்து வாசு திகிலில் தடுமாறுவதும், 'பொன்னுத்தாயி என்னை மன்னிச்சிடு' என்று சொல்வதும், கதவுக்கு அப்பால் ராஜேஷ் கொலுசைக் கையில் ஏந்தி அப்பாவை ஆடிக் கொண்டே வருவதும் — செம்மையின்.

'நீங்க இதே மண்ல இன்னொருதரம் பொறக்கணும்— சர்வாதிகாரியா. அப்பத்தான் நாடு உருப்படும்' என்று காந்தி படத்தைப் பார்த்துச் சொல்வதும், அத்தனை அடியிலும் உதையிலும் காந்தி படத்தை மார்புடன் அணைத்துக் கொண்டு, ஜீப்பில் பலவந்தமாக அழைத்துச் செல்லப்படும் மகளைப் பார்த்துக் கத்துவதும் என்று அட்டகாசமாய்ச் செய்திருக்கும் நபர் யார் யார் என்று கேட்க வைக்கிறார். ஆமாம், யார் அந்தத் தியாகி?

'இசை கூட மலேஷியா வாசுதேவன்தான். கதை மூட வைக்க விடவில்லை. மென்மையான இதமான இசை இரண்டு பாடல்களுக்கு. கேட்கலாம்.

'ஒண்ணுக் கேட்க மறந்துட்டேனே' என்று துடியாய்க் குதிக்கும் அருந்ததி ஜோர் தான். ஆனால் படத்தில் அவர் எதற்கு?

சுரேஷ் — சசிகலா இளமைக்காகப் போதும். மோட்டார் சைக்கிளில் கோமாளி வேஷத்துடன் ஊருக்குள் நுழைவது நம்ப முடியாவிட்டால் கூட ரசிக்க முடியாமல் இல்லை. சசிகலா — ம், பரவாயில்லை ரகம்.

திகிலும், பரபரப்புமாய் ஆவலைத் தூண்டும் வகையில் படத்தைக் கொண்டு சென்றிருக்கும் டைரக்டர் கே. எஸ். மாதங்கனைப் பாராட்டியே ஆக வேண்டும்.

வெல்டன் மாதங்கன். கீப் — இட் — அப்!

— ஜெயமன்மதன்.

முதல் மாத சம்பளம் வந்ததும், சம்பளக் கவரை ஸ்வாமி படத்தின் முன் வைத்து நமஸ்காரம் பண்ணினாள் ஈசுவரி... அப்புறம் அண்ணாவிடம் கொடுத்து... நமஸ்காரம் செய்து... எழுந்த போது, அண்ணா..தன் பையிலிருந்து ஒரு பத்து ரூபாயையும் அந்தக் கவருடன் சேர்த்துத் திருப்பிக் கொடுத்தான்.

''...இந்தப் பத்து ரூபாயைப் போட்டு நாளைக்கே பாங்கில் ஒரு அக்கௌண்ட் திற... உன் சம்பளப் பணத்தை அப்படியே போடு.. நீ சம்பாதித்த பணம்... எனக்கு ஒரு பைசா வேண்டாம்...''

''...பரவாயில்லே அண்ணா...''

அவன் கேட்கவில்லை... அடுத்த நாள் அண்ணாவே அவளை பாங்கிற்கு அழைத்துப் போனான்.

மாசக் கடைசிவரை இப்படியே ஓடிற்று... மாதக் கடைசியாகப் பார்த்து மன்னிக்கு உடம்பு முடியாமல் போய்விட்டது... கவனிப்பதற்கு ஆள் இல்லை என்று நர்ஸிங் ஹோமில் சேர்த்தார்கள்... ஒரு வாரம் அங்கு இருந்துவிட்டு மன்னி திரும்பி வந்தாள்... கூடவே பில்லும் வந்தது... 'இவ்வளவா... இவ்வளவா..?' என்று பில்லைப் பார்த்துப் பார்த்து அண்ணா மாய்ந்துப் போனான். உடம்பு முடியாமல் படுத்திருந்த மன்னியை, வசவுகளால் அர்ச்சித்தான்.. 'இப்ப, யார்கிட்டே கடன் கேட்கலாம்..?' எவன் கொடுப்பான்..?' கூடத்தில் குறுக்கும் நெடுக்குமாக நடந்து...

'விடுவிடு'வென்று உள்ளே போய், ஈசுவரி 'செக்' புத்தகத்தை எடுத்து வந்தாள்... கையெழுத்துப் போட்டு அவனிடம் கொடுத்தாள்... மறுக்கவில்லை... வாங்கிக் கொண்டான்...

அப்புறம் எத்தனை 'செக்'குகள்... கையெழுத்துக்கள்...

அண்ணா பெரிய இடமாகக் கொண்டு வந்தான்... பாங்கில் ஆபீசர்... நல்ல சிவப்பாக.. உயரமாக... பெண் பார்க்கும் படலம் ஆனதும் கோபு இவளிடம் அபிப்பிராயம் கேட்டான்... '...உனக்குத் தெரியாதா அண்ணா..' என்பதோடு இவள் நிறுத்திக் கொண்டாள்.

ஒருவாரம் ஆயிற்று... 'பார்த்துவிட்டுப் போனவர்கள் போனவர்கள்தான்... ஒரு தகவலும் இல்லே... தெரிந்துவருகிறேன்...' என்று அண்ணா போனான்... திரும்பிவந்த போது முகத்தில் அத்தனை உற்சாகம் இல்லை... ஏதோ சொல்லீ வந்த குழந்தையிடம் எரிந்து விழுந்தான். மன்னியிடமும் எரிந்துவிழுந்தான்... அன்று இரவு சாப்பிடும்போது மன்னியிடம் சொல்லுவது இவள் காதில் விழுந்தது...

''...ஏண்டி... நம்ப ஈச்வரிக்கு என்ன குறைச்சல்...?... பிடிக்கல்லேங்கிறானே...''

தற்செயலாகக் கண்ணாடி முன் நின்றிருந்த ஈசுவரி தன்னையே பார்த்துக் கொண்டாள்.

எனக்கு உயரம் குறைச்சல்... நிறமும் மட்டுத்தான்... மூக்கு இன்னும் கொஞ்சம் எடுப்பாக இருக்கலாம்... 'ஓஹோ'வென்று மாய்ந்துப் போகிற அழகு என்னிடம் இல்லை..

அதன்பிறகு... ஒவ்வொரு தடவையும் சின்ன எதிர்பார்ப்பு... பரபரப்பு... முடிவில் அண்ணாவின் பெருமூச்சு... ஏமாற்றம்... இதேபோல்...

* * * * * *

மன்னிக்கு உடம்பு முடியவில்லை... இருந்தாலும் ஒரு இடம் விடாமல் சுற்றினாள்.. கடை கடையாக ஏறி இறங்கினாள்... ஒரு வாழைநார்ப்பை வாங்க எத்தனை கடைகள்.. பேரங்கள்...

இவளுக்கு அலுப்பாக வந்தது... சற்று வெளியே வந்து காற்றாட நின்றாள்...

''...சௌக்கியமா...?''

# ஏதோ புரிந்த மாதிரி...



யார்...? சட்டென்று அடையாளம் தெரிய வில்லை.... நெற்றியைச் சுருக்கி... ம்... வந்து.. மூர்த்தியா?... ஆமாம்... அவர்தான்...

''...ம்... நீங்க...''

''...கமலா... இவங்கதான் சகவரி... மெட்ராஸ்லே என் கூட வேலை செஞ்சிண்டு இருந்தாங்கன்னு சொன்னேனே...'' என்றான் மூர்த்தி.

''...நமஸ்காரம்...''

இவள்தான் மூர்த்தியின் மனைவியா... ம்... சுமாராக... ரொம்ப சுமாராக இருக்கிறாளே.. குழந்தை கூட இவளைக் கொண்டு கறுப்பாக.. சோனியாக...

என்ன பேசுவது என்று புரியவில்லை... ஆபீசைப் பற்றிப் பேசலாமா... வேறு என்ன இருக்கிறது பேச...?

''...இப்ப எங்கே?... திருச்சியா...?''

''ம்...''

''வரட்டுமா... வரேன்...''

அதற்குள் மன்னி அடுத்த கடைக்குப் போய்விட்டாள்... இவளும் அங்கே போய்.. கூடவே நின்று... விலை படிந்தால் பர்சை எடுக்கத் தயாராக...

''..இவதான் உங்களை வேண்டாம்னு சொன்ன கிளியோபாட்ராவா...?''

திடுக்கிட்டு நிமிர்ந்தான்... சற்றுமுன் 'நமஸ்காரம்' என்று சொன்ன அதே குரல்... மூர்த்தியின் மனைவி...! எட்டிப் பார்த்தான்... அவளேதான்...! இவள் கவனிப்பது தெரிந்ததும் சட்டென்று பார்வையைத் திருப்பி... அவசரம் அவசரமாக அங்கிருந்து கிளம்ப



முயன்முள்...

ஒரு எட்டில் பாய்ந்து போய் அவளைப் பிடித்து நிறுத்தவேண்டும் போலிருந்தது. யார், யாரை வேண்டாம் என்று சொன்னார்கள் என்று கேட்க வேண்டும் போலிருந்தது..

'நானு வேண்டாம் என்று சொன்னேன்...?' மூர்த்தியையா...? எப்பொழுது...?' என்று சுடச் சுடக் கேள்விகளாகக் கேட்கத் துடித்தது...

ஒரு விநாடி...

ஏதோ புரிந்த மாதிரி...

* * * * *

'இனி நமக்குக் கல்யாணம் இல்லை... என்ற முடிவுக்கு அவள் வந்த சமயத்தில் தான், மூர்த்தி இவள் வேலை செய்யும் கிளைக்கு வந்து சேர்ந்தான்...

சேர்ந்து கொஞ்ச நாட்களுக்குப் பிறகு பஸ் ஸ்டாண்டில் இவளைப் பார்த்ததும் சிரித்தான்... '...நீங்களும் இந்தக் காலனியில் தான் இருக்கிறீர்களா...?' என்று ஆச்சரியப்பட்டான்... அவனைப் பற்றி இவள் அறிந்து கொண்டாள்... மூர்த்தி ஒண்டிக்கட்டை... ஒரு அக்காளைத் தவிர வேறு ஒருவரும் கிடையாது...

இரண்டு மூன்று தடவை இவள் வீட்டுக்கு அவன் வந்தான்... ஒரு லீவு லெட்டர் கொடுக்க... ஒரு டெலிபோன் செய்ய என்று...

ஒருமுறை அவன் அக்காவையும் அழைத்துக்கொண்டு வந்தான்... அது இவளைப் பெண் பார்க்க...

இந்த முறை மனத்தில் நிறைய நம்பிக்கை இருந்தது...

அண்ணுவிற்கு ஏதோ வேலை இருந்தது... நாலு நாள் கழித்துத்தான் மூர்த்தியின் அக்காவைப் பார்க்கப் போனுன்... வந்த போது முகம் தொங்கியிருந்தது... வழக்கம் போல் யாரிடமும் எதுவும் பேசாமல்... இரவில் மன்னியிடம் "சகுனம் சரியில்லையாம்... சக..."

"ப்ராப்தம் அவ்வளவுதான்..." வாயைத் திறந்து அவன் சொல்லவில்லை... பெருமூச்சில் சொன்னுன்...

அதன்பிறகு எந்த ஏற்பாட்டுக்கும் இவள் ஒப்புக் கொள்ளவில்லை.

* * * * *

எதிரே, தீபஒளியில் அம்மனின் முகம் ஜொலித்தது... கூடை கூடையாகப் பூவிதழ்கள் அம்பிகையின் பாதத்தில் விழுந்து கொண்டிருக்க...

"...பாணுசுரனை அழிப்பதற்காகச் சக்தி இப்படிக் கன்னியாகுமரியாக அவதரித்தாள்..." மன்னி ஸ்தல புராணத்தைப் படித்தாள்... "...இந்த தேவி மீது சுசீந்திரன் ஈசன் காதல் கொண்டார்... தேவியும் இசைந்தாள்... ஆனுல்... இந்தக் கல்யாணம் நடந்து, தேவி போய்விட்டால், இங்கிருப்பவர்கள் கதி என்ன...? என்ற கவலை எல்லோருக்கும் வர... திருமணத்தை நிறுத்த நாரதர் முன் வந்தார்... கணு இல்லாத கரும்பு — நரம்பு இல்லாத வெற்றிலை என்று கேட்டதையெல்லாம் சேகரித்துக் கொண்டு சிவன் அவசர அவசரமாக வர.. விடிய இன்னும் நேரம் இருக்கும்போதே நாரதர் சேவலாக உருவெடுத்துக் கூவ.. இந்தச் சதியை அறியாத சிவன் காலம் கடந்துவிட்டது என்று திரும்பி விட்டார்... தேவி இன்னும் கன்னியாக.."

...அண்ணு இப்படிச் செய்திருப்பானு...? நாரதராக மாறி இருப்பானு...?

...மாட்டான்... அன்று சாயந்திரம் அவன் வந்தது... உட்கார்ந்தது... பெருமூச்சுவிட்டது... சாப்பிடாமல் படுத்துக் கொண்டது...

...ஆனுல்...? வலுவில் வந்தவன் 'வேண்டாம்' என்று போய்விட்டான்...? அதற்குப் பிறகும் பஸ் ஸ்டாண்டில் சிரித்தற்கு என்ன அர்த்தம்...?

'...இவதான் உங்களே வேண்டாம்னு சொன்ன கிளியோபாட்ராவா...?'

அப்படியானுல்...? இத்தனை நாளும் போகாத ஊருக்குத் தான் அண்ணு வழி சொல்லிக் கொண்டிருந்தானு...?

...அண்ணுவின் மட்டு சம்பளம்... வியாதிக்கார மனைவி... குழந்தைகளின் எதிர்காலம்... ஒரு குடும்பம் என்றல் எத்தனை ஆசைகள்...? செலவுகள்... கல்யாணம் ஆகி நான் போய்விட்டால் இத்தனையையும் சமாளிக்க அவன் எங்கே போவான்...?

...சுயநலத்திற்காக மனிதன் எதையும் செய்வான்... இது ஒன்றும் புதிது இல்லை... வழி வழியாக வந்திருக்கிறது...

...கர்ப்பக்ருகத்தினுள் பார்த்தாள்... மூக்குத்தியும், புல்லாக்கும் ஜொலித்தன...

...தெய்வத்திற்கே இப்படி ஒன்று நடந்திருக்கிறது...

...எனக்கு வந்ததில் ஆச்சரியம் எதுவும் இல்லை...

"...அத்தை...! வாங்கோ...! க்விக்... 'சன் செட்' பார்த்துடலாம்... சீக்கிரம்... அப்புறம் முடியாது..."

...அஸ்தமனமா...?

'...அதைத்தான் ஏற்கெனவே பார்த்தாகி விட்டதே...!



இவன்: "புது டைப்பிஸ்ட் உஷா"வின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு நைஸ்ஸா "உன் பேரென்ன?"ன்னு ஆரம்பிச்சேன்...!"

அவன்: "என்ன சொன்னு!"

இவன்: "உஷார்"ன்னுட்டாள்!

—எஸ். என். மாடசாமி.

# மாற்றுக் கருத்துக்கு உரிய மதிப்பு

"நேரம் நெருங்கிவிட்டது" என்ற தலைப்பில் ஈழத்தமிழர் அவலநிலை குறித்து, மத்திய அரசு சரியான நடவடிக்கை எடுக்காமல் மெத்தனமாக இருப்பதைப் கண்டித்து ஆணித்தரமான தலையங்கம் ஒன்றைத் தீட்டியிருந்தீர்கள். அதற்கு ஈழத்தமிழர் சார்பில் எனது நன்றி.

ஆயினும், அதில் நீங்கள் குறிப்பிட்டுள்ள ஒரு பகுதியை எம்மால் ஜீரணிக்க முடியவில்லை. அதாவது, இந்திய அரசு ஈழத்தமிழர்களை அழைத்துப் பேசி, 'வன்முறை'யையும், 'தனி ஈழ நாடு' கோருவதையும் கைவிடுமாறு வற்புறுத்தவில்லை என்று குறிப்பிட்டுள்ள பகுதியையே சுட்டிக் காட்டுகிறேன்.

நான் 15 வயதிலிருந்து ஈழத்தமிழர் அரசியலில் ஈடுபட்டவன். ஈழத்தந்தை செல்வநாயகத்தினால் நிறுவப்பட்ட 'சுதந்திரன்' வாரமிருமுறை இதழின் பிரதம ஆசிரியனாக இருந்தவன். கடந்த 1983 ஜூலையில் சுதந்திரன் பத்திரிகை ஜெயவர்த்தன அரசினால் பூட்டிச் சீல் வைக்கப்பட்டது. நான் 1983 ஜூலை முதல் தேதி கைது செய்யப்பட்டுக் கொழும்பு வெலிக்கடைச் சிறையில் அடைக்கப்பட்டேன். அங்கே குட்டிமணி, தங்கத்துரை, ஜெகன், டாக்டர் இராசசுந்தரம் ஆகியோர் உட்பட 53 தமிழர்கள் சிறைக்காவலர்களின் உதவியுடன், படுகொலை செய்யப்பட்டதைக் கண்ணாற் கண்டவன்.

சிறையில் எம்மில் எட்டுப் பேர், எம்மைக் கொலை செய்ய ஏவப்பட்ட வெறியர்களுடன் கைவிலங்குகளால் தடி தண்டுகளைக் கொண்டு எதிர்த் தாக்குதல் நடத்தியே உயிர் தப்பினோம். பின்னர், எந்நேரமும் சிங்கள வெறியர்களோ இராணுவமோ என்னைக் கொலை செய்யலாம் என்ற அச்சத்தின் காரணமாகத் தமிழகத்துக்கு வந்து வாழுகிறேன்.

இலங்கைத் தமிழர்கள் கடந்த 35 வருடங்களாக – 1975 வரை – தனித் தமிழ் ஈழம் கோரவில்லை. சிங்கள மக்களுடன் சரிநிகர் சமானமாக, அதேசமயம் எமது மொழி, கலை, கலாச்சாரம் ஆகியவற்றைப் பாதுகாத்து, ஐக்கிய இலங்கையில் வாழக்கூடிய ஓர் சமஷ்டி அமைப்பையே வலியுறுத்தி வந்துள்ளனர்.

ஆனால் சிங்களப் பெரும்பான்மை அரசுகளோ 'சமஷ்டியை' பிரிவினை என்று சிங்கள மக்களிடம் பிரசாரம் செய்ததுடன் தமிழர்களை எதிரிகளாகச் சிங்களவரிடையே பிரசாரம் செய்து வந்தனர்.

30 ஆண்டுகளாக, ஈழத்தமிழர்கள் தங்கள் நியாயமான கோரிக்கைகளை வென்றெடுப்பதற்கு நடத்திய அஹிம்சைப் போராட்டங்கள் சிங்கள இராணுவத்தினால் நசுக்கப்பட்டு விட்டன.

1972–ஆம் ஆண்டு சிங்களவர்களின் பிரதிநிதிகள் ஓர் அரசியல் நிர்ணயச் சபையைக் கூட்டி, இலங்கைக்கான புதிய குடியரசு அரசியலமைப்பு எப்படியிருக்க வேண்டும் என்று ஆராய்ந்த போது, அதிலே கலந்து கொண்ட ஈழத் தமிழ் நாடாளுமன்ற உறுப்பினர்கள், 1. இலங்கையில் அரசியலமைப்பு, சமஷ்டியாக அமைய வேண்டுமென்றும் 2. இலங்கையின் உத்தியோக மொழியாகச் சிங்களத்துடன் தமிழும் இருக்க வேண்டுமென்றும், 3. இலங்கை ஒரு மதசார்பற்ற நாடாக இருக்க வேண்டுமென்றும் வலியுறுத்தினர்.

தமிழர்களின் இக்கோரிக்கைகள் விவாதத்துக்கே எடுத்துக் கொள்ளாமல், நிராகரிக்கப்பட்டன. இதையடுத்து அரசியல் யாப்பை உருவாக்குவதில், தமிழர் பிரதிநிதிகள் பங்கேற்காமல் அரசியல் நிர்ணய சபையிலிருந்து வெளியேறினர்.

எனவே இப்போது இலங்கையில் அமுலில் இருக்கும் அரசியலமைப்பு, சிங்களவர்கள் கூடி, சிங்கள மக்களின் நலனுக்காக, சிங்களவர்களே உருவாக்கிய ஒற்றையாட்சி **(Unitary form of Govt.)** அரசியலமைப்பே. இந்த அரசியலமைப்புக்குத் தமிழர்கள் தமது இணக்கத்தை அளிக்கவேயில்லை. அது தமிழர் மீது திணிக்கப்பட்டுள்ளது.

இலங்கைத் தமிழர்கள் பெரும்பான்மையாக வடக்கு, கிழக்கு மாநிலங்களில், 8000 சதுர மைல் நிலப்பரப்பில் வாழ்கிறார்கள். தமிழர்கள் பெரும்பான்மையாக வாழும் பிரதேசங்களிலும், அவர்களைச் சிறுபான்மையினராக்கும் நோக்குடன், 3 இலட்சம் சிங்களவர்கள் இதுவரைத் தமிழர்களின் சம்மதமின்றிக் குடியேற்றப்பட்டுள்ளனர். சுமார் 2000 சதுர மைல் தமிழர்களின் நிலம் திட்டமிட்ட அரசு மேற்கொண்ட சிங்களக் குடியேற்றத்தினால் பறிபோய்விட்டது. இதனால் புதிய சிங்களத் தொகுதிகள் இரண்டும் உருவாக்கப்பட்டுவிட்டன. கோணேஸ்வரர் கோவிலில் இருக்கும் தொன்மை வாய்ந்த சிவலிங்கத்தையே கடலில் தூக்கியெறிந்துவிட்டு, அங்கு புத்தர் சிலை வைக்க முயற்சி நடக்கிறது.

ஜெயவர்த்தனவினால் தனது இராணுவத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை என்றோர் கருத்து இந்தியாவிலுண்டு. அது தவறானது. ஜெயவர்த்தனவே இராணுவத்தைக் கொண்டு இத்தனை அட்டூழியங்களையும் தமி

மூருக்கு இழைத்து வருகிறார். ஜெயவர்த்தன் வின் மருமகன்தான் இலங்கை இராணுவத் தளபதியாக இருக்கிறார்.

ஈழத் தமிழர்கள் கேட்பது பிரிவினை அல்ல; அவர்கள் கேட்பது சிங்கள ஆதிக்கத்திலிருந்து தமது தாயகத்துக்கு விடுதலை. அதுவும் முன்பு இல்லாத ஒன்றைக் கேட்கவில்லை. 1833 வரை, தமிழர் வாழ் பிரதேசங்கள் தனி நிர்வாகப் பகுதியாகவும், சிங்களப் பிரதேசங்கள் தனி நிர்வாகப் பகுதியாகவுமே இருந்து வந்தன. 1833—ல் கோல்புரூக் என்ற ஆங்கில ஆளுனர், இனங்களின் தனித்தன்மை பற்றி அக்கறையின்றித் தனது நிர்வாக வசதிக்காகவே இருநாடுகளின் எல்லைக்கோடுகளையும் அழித்து, 'ஒரே இலங்கை' என்ற, செயற்கைக் கோட்பாட்டை உருவாக்கினான்.

ஆக ஈழத்தமிழர் கேட்பதெல்லாம், நீயும் வாழு, எம்மை எமது பகுதியில் சுதந்திரமாக வாழவிடு — என்பதுதான்; இல்லை, உங்களைப் (தமிழரைச்) பூண்டோடு அழிப்பேன் என்று கொக்கரிக்கிறார் ஜெயவர்த்தன.

அடுத்து, தம் உயிரையும் பணயம் வைத்து, தமது இனத்தையும், நிலத்தையும் பாதுகாப்பதற்காகத் தமிழ் ஈழ விடுதலைப் புலிகள் மேற்கொண்டு வரும் ஆயுதமேந்திய தேசிய விடுதலைப்போராட்டத்தை 'வெறும் ' வன்முறை' என்று நீங்கள் குறிப்பிட்டுள்ளதை ஏற்க முடியாது.

இலங்கையில் தமிழ் தேசிய இனத்தின் சட்டபூர்வமான சுயநிர்ணய உரிமையையும், இறைமையையும் நிலைநாட்டுவதற்கு — சாத்தியமான சட்டபூர்வமான அனைத்து வழிகளும் அடைக்கப்பட்ட நிலையில், தற்காப்புக்குத் தமிழ் இளைஞர்கள் ஆயுதப் போரில் ஈடுபடுவதை எப்படித்தவறென்று கூற முடியும்?

—கோவை. மகேசன்,
ஆசிரியர், சுதந்திரன் (ஈழம்),
தலைவர், தமிழீழ விடுதலை அணி,
சென்னை—20.

(மாற்றுக் கருத்துக்கு மதிப்பளிக்கும் முறையில் பிரசுரிக்கப்படுகிறது. ஜெயவர்த்தன ஆட்சியில் போராடும் ஈழத் தமிழர்களின் துயரமும் நாம் அறியாதவை அல்ல. ஆனால் இன்றுள்ள ஈழத் தமிழர்களுக்குள் கருத்து ஒற்றுமை ஏற்படாத வரையில், வன்முறையையும், பிரிவினைக்கு ஒப்பான சுதந்திரத் தமிழ் ஈழக் கோரிக்கையையும் அவர்கள் கைவிடாத வரையில் அவர்கள் பிரச்சினையில் பாரதம் தலையிட்டுத் தீர்வு காண்பது தார்மீக ரீதியில் மிகவும் கடினமாகிப் போகும் என்பதில் எமக்கு ஐயமில்லை.

— ஆசிரியர்.)

# டாக்டர் எழுத்தாளர்கள்

**கனல் பறந்த கல்லக்குடி**

* கல்லூரால் கல்லக்குடி என்று பெயர் மாற்றம் ஆன பின்னுலும் கூட டால்மியாபுரம், டால்மியா என்றுதான் பிரபலமாக உள்ளது.

* இயல், இசை, நாடகம் பற்றி நயமும் நகைச்சுவையும் கலந்து பேசியவர்கள் சிலம்பொலி செல்லப்பன், கோவி. மணிசேகரன், தலைமுறை எழுத்தாளர் நா.பா.

* காதல், காதல், காதல் — கவியரங்கில் கலந்த கவிஞர்கள் அம்மங்கை குமாரதேவ், செல்வி சுபா (எழுத்தாளர்கள் சுபா அல்ல), பிரேமா, அட, அனுராதா ரமணன்!

* "இவர்கள் காதல்
காந்தி சிலையில் ஆரம்பித்து
அண்ணா சமாதிக்கு நடந்து வருவதற்குள்
சமாதியாகிவிடுகிறது!"

—காதல், காதல், காதலில், செல்வி சுபாவின் ரசிக்கப்பட்ட வரிகளில் சில.

* எனக்குப் பிடித்த மூன்று எழுத்தாளர்கள் 1.கோவி. மணிசேகரன், 2. கோவி. மணிசேகரன், 3.கோவி. மணிசேகரன் — சொன்னவர் கோவி.

* எழுத்தாளர்கள் டாக்டர்கள் போல. டாக்டர்கள் என்ன மருந்து வேண்டும் என்று நோயாளியிடம் கேட்டு அதைக் கொடுப்பதில்லை. எதைக் கொடுத்தால் நோயாளிக்கு நல்லதோ அதையே கொடுப்பார்கள். வாசகர்கள் முன்னேற எது தேவையோ அதைத்தான் எழுத்தாளன் கொடுக்க வேண்டும் — நா.பா..

* 'இன்றைய நாவல்கள் எங்கே போகின்றன?' கருத்தரங்கை டால்மியாபுரத்தார்கள் கலபத்தில் மறக்க மாட்டார்கள்.

நாவல்கள் எங்கே போகின்றன என்று சிலரும், எங்கே போக வேண்டும் என்று சிலரும் கத்திகளைத் தூக்காமல் 'கத்தி'ச் சண்டைப் போட்டார்கள். இந்தச் சொல் அடிதடியில் சிமெண்ட்டைவிட அதிக உயரத்திற்குத் தூசி பறந்தது.

* இளைஞர்கள் திட்டமிட்டு முன்னேறுகிறார்களா? திசை தடுமாறுகிறார்களா? பட்டிமன்ற நடுவர் அடக்கமான ஒளவை நடராசன். கனல் கக்கும் பேச்சாளர்கள்.

டால்மியாபுரம் மனமகிழ் மன்றத்தினர் சமீபத்தில் ஏற்பாடு செய்திருந்த இந்த நிகழ்ச்சிகளைப் பார்த்தும், கேட்டும், ரசித்தும் தொகுத்தவர்கள்:

சுரேஷ் — பாலா

புதிய விளையாட்டு

# காற்றிலேறி கடலையும் சாடுவோம்

அற்புதமான விளையாட்டு இந்தியாவில் சமீபகாலமாகப் பிரபலமாகி வருகிறது. அமெரிக்கா மற்றும் ஐரோப்பிய நாடுகளில் மிகப் பிரபலமானது விண்ட் ஸர்ஃபிங் (**Wind Surfing**) இது வெளிநாட்டு உல்லாசப் பயணிகளைக் கவருவதற்காக இந்தியாவிலும் இப்போது அறிமுகப் படுத்தப்பட்டுள்ளது.

தேவை கட்டுமரம் போன்ற படகு, பாய்மரம் ஆகியன. தவிர, விரிந்து பரந்த நீர் நிலை; அதன் மீது தவழும் நல்ல காற்று. 'கட்டுமர'ப் படகு கனமில்லாத, ஃபைபர் கிளாஸ் (**Fibre Glass**) என்னும் பொருளினால் செய்யப்பட்டிருக்கும்.

படகின் மீது நின்றுகொண்டு, பாய்மரத்தைத் திறமையாகக் கையாண்டு நீரைக் கிழித்துக் கொண்டு அம்பாகப் பாய்ந்து செல்லலாம். படகின் மீது நின்றுகொண்டு நீரில் விழாமல் சமாளிப்பதற்கும் பாய்மரத்தைக் கையாள்வதற்கும் சிறிது பயிற்சி தேவை. காற்றின் உதவியுடன் தான் இப்படகு செல்கிறது. போட்டி பந்தயங்களின் போது காற்றை எதிர்த்துக் கூடச் செல்ல வேண்டி இருக்கும். இந்தியாவில் கோவாவில் இது மிகப் பிரபலமான விளையாட்டாக வளர்ந்திருக்கிறது.

இந்த அற்புதமான விளையாட்டைத் தமிழ்நாட்டிலும் அறிமுகப்படுத்த நமது சுற்றுலாத் துறையும் விளையாட்டுத் துறையும் முடிவு செய்தன.

மகாபலிபுரம் செல்லும் வழியில், சென்னையிலிருந்து 35 கி.மீ. தூரத்தில் உள்ள முட்டுக்காடு என்ற கடற்கரைக்கு அருகில் உள்ள இடத்தை இதற்காகச் சுற்றுலாத் துறை ஒதுக்கியது.

விளையாட்டுத் துறையும் தன் பங்குக்கு இரண்டு படகுகளையும், இவ்விளையாட்டைப் பயிற்றுவிக்க ஒருவரையும் அளித்தது. சென்னைக் கல்லூரிகளின் விளையாட்டு ஆசிரியர்களுக்கு இலவசமாகப் பத்து நாட்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது. இவ்விளையாட்டைப் பிரபலப்படுத்த முதல் முயற்சி இது.



செய்தியைக் கேட்டுப் பொது மக்களும் ஆர்வத்துடன் வர ஆரம்பித்தனர். இருக்கும் படகுகளோ இரண்டேதான்.

கூட்டம் கூடுவதைப் பார்த்த சுற்றுலாத் துறை 'ஸர்ஃபிங் செய்யக் கட்டணம் வசூலித்தால் என்ன?' என நினைத்தது. ஒரேயடியாகக் கூட்டத்தைக் குறைக்கும் வகையில் அரை மணிக்கு 15 ரூபாய் வசூலிக்க ஆரம்பித்தது.

35 கி.மீ. தூரம் பயணம் செய்து இவ்விடத்துக்கு வருபவர்கள் குறைந்தது ஒரு மணி நேரமாவது பயிற்சி செய்ய விரும்புவார்கள். ஒரு நாளைக்கு 30 ரூபாய், தவிர பயணச் செலவு என்றால் எத்தனை நாட்களுக்குச் சராசரி மனிதனால் தாக்குப் பிடிக்க முடியும்?

ஒரு விளையாட்டைப் பிரபலப்படுத்த வேண்டுமானால் சரியான முறையில் ஊக்கம் அளிக்க வேண்டும். இப்படிக் கட்டணம் விதித்தால் மேட்டுக்குடி மக்கள் மட்டுமே பயிற்சி செய்ய முடியும்.

கட்டணம் குறைவாக இருக்கும் பட்சத்தில் ஆர்வம் உள்ள அனைவரும் வருவார்கள். நகரத்திலிருந்து தொலைவில் இருப்பதால் ஆர்வம் உள்ளவர்கள் மட்டுமே வருவார்கள். எனவே கட்டணத்தைக் குறைத்துப் படகுகளின் எண்ணிக்கையை அதிகப்படுத்த வேண்டும். இப்படகுகளைச் சென்னை கிண்டியிலேயே தயாரிக்கின்றனர். எனவே கிடைப்பது குதிரைக் கொம்பு இல்லை.

அயல்நாட்டு உல்லாசப் பயணிகளின் எண்ணிக்கையை அதிகரிக்க நைட் கிளப்களோ, மதுக்கடைகளோ அவசியமல்ல. இதுபோன்ற குற்றமற்றதும் உடல், மன ஆரோக்கியம் பேணுவதுமான உல்லாச விளையாட்டுக்களே அவர்களை அதிகமாக ஈர்க்க முடியும்.

விண்ட் சர்ஃபிங்குக்கு ஏற்றதான பிரமாதமான சூழ்நிலை இங்கு அமைந்திருக்கிறது. பொதுமக்களின் ஆர்வம் நிறையவே இருக்கிறது. இரண்டையும் உபயோகப்படுத்தி ஒரு அற்புதமான விளையாட்டை ஆதரிக்க வேண்டிய பொறுப்பு விளையாட்டுத் துறையினருக்கும், சுற்றுலாத் துறையினருக்கும் உண்டு.

– **ஏ.எஸ். திவாகர்**

பின் அட்டை வண்ணப்படம்:

**ஏ.வி. பாஸ்கர்**



# அழகு அதிகரிக்க...

உங்கள் உடலமைப்பு நன்கு கவனித்து, அதற்கேற்ப சில முறைகளைப் பின்பற்றுவதன் மூலம் நீங்கள் அழகாகத் தோற்றமளிக்கலாம். அதற்கான சில அழகு குறிப்புக்கள் கீழே தரப்பட்டுள்ளன.

## புடவை

* நல்ல பருமனான பெண்கள், சற்று அழுத்தமான நிறமுடைய புடவைகளை அணிய வேண்டும்.
* ரொம்பவும் கறுப்பானவர்கள், ஒரு போதும், வெள்ளை நிறப் புடவை அணியக் கூடாது
* இளநீலம், ரோஜா, அல்லது ஆரஞ்சு நிறப் புடவைகள், கறுப்பானவர்களுக்கு அழகு சேர்க்கும்.
* மாநிறமானவர்கள் வெள்ளைப் புடவை அணியலாம்.
* சிவப்பான பெண்கள் அழுத்தமான நிறச்சேலைகள் அணிய வேண்டும்.
* மிக உயரமானவர்கள் அகலக்கரையும், படுக்கைக் கோடுகளும் கொண்ட புடவைகள் அணியலாம்.
* ஹை ஹீல்ஸ் அணிபவர்கள், அது மறையும்படி, புடவையைத் தழையக் கட்டிக் கொள்ள வேண்டும்.
* அழுத்தமான நிறம் மெல்லிய கரையுடைய புடவைகள், குள்ளமானவர்களையும் சற்று உயரமாய்க் காட்டும்.

## ரவிக்கை

* குறுகலான கழுத்துடைய பெண்கள், வட்டக் கழுத்து பிளவுஸ் அணியாமல், 'வி' கழுத்து பிளவுஸ் அணிந்தால் எடுப்பாய் இருக்கும்.
* பொதுவாக, பிளவுஸின் கழுத்துப் பட்டை, அகலமாய் இல்லாமல், மெல்லியதாய் இருக்க வேண்டும்.
* புடவைக்கேற்ற நிற பிளவுஸ் கைவசமில்லையெனில், வெள்ளை நிற பிளவுஸ் அணியலாம். அழகு சேர்க்கும்

## கொண்டை, தலைமுடி

* அகன்ற, வட்டமுகமுடையவர்கள், உயரமான கொண்டைப் போட்டுக் கொள்ள வேண்டும்.
* தலைமுடி நீளமாய் இல்லாதவர்கள், பின்னிக் கொள்வதைவிட, கொண்டை போட்டுக் கொள்வது அழகு.
* கூந்தல் சுருள், சுருளாய் அமைந்தவர்கள், பின்னல் முனையை அப்படியே விட்டு விட்டால் நன்றாய் இருக்கும்.
* பன் கொண்டைப் போட்டுக் கொண்டால், கொண்டையைச் சுற்றி வட்டமாய் மல்லிகைப் பூச்சரம் சூட்டிக் கொள்ளலாம்.
* 'ரிங்' எனப்படும் வளையம் அமைந்த கொண்டைக்கு, மேற்புறம், அரைச்சந்திரன் வடிவில் பூ அணியலாம்.

## கண், புருவம்

* கண்களுக்கு மைதீட்டுகையில், அடர்த்தியாகத் தீட்டிக் கொள்ளக் கூடாது. கண்களுக்கு வெளிப்புறமாயும், பக்கவாட்டிலும், மைக் கோடுகள் செல்வது அழகைக் கெடுக்கும்.
* மூக்கின்மேல் பகுதியிலிருந்து, கண்கள் சற்றுத் தள்ளியிருப்பின் மைக்கோடுகளை மூக்கின் அருகில் செல்லும்படி இழுக்க வேண்டும்.
* புருவத்திலிருந்து கண்கள் சற்று அதிகம் கீழே இறங்கியிருந்தால், புருவப் பகுதியில், மைக்கோட்டினைச் சற்றுத் தடிப்பாக இழுக்க வேண்டும்.

## கொலுசு

* கால்கள் அகன்றும், சதைப் பிடிப்புடனும் உள்ள பெண்கள் பட்டை கொலுசு அணிந்தால் அழகாயிருக்கும்.
* உயரமான, சதைப் பிடிப்பில்லாத பெண்கள், சங்கிலி போன்ற மெல்லிய கொலுசு அணியலாம்.
* மணமாகாத பெண்களுக்குத்தான், சலங்கைகள் அமைந்த, கொலுசுகள் கவர்ச்சி சேர்க்கும்.

தொகுப்பு : ஜூலி

நன்றி: 500 அழகுக் குறிப்புகள்; நர்மதா பதிப்பகம், 10, சோமசுந்தரம் தெரு, சென்னை—17. விலை: ரூ. 11/—.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K Rajendran

## வளரும் குழந்தைகளுக்கு சுவையான துணையாக விளங்கும் பால் பிஸ்கட்

சத்துமிகுந்த,
சுவையான பிஸ்கட்.







LINTAS BIN MB 10 2013 TM

